திருமலைக்கு . . . . . . . . வருகை தாருங்கள்!



ஸ்ரீ வேங்கடேஸ்வரரின்

# வசந்தோற்சவம்

[20-4-78 முதல் 22-4-78 வரை]

வெள்ளி ரதோற்சவம் 21-4-78 அன்று நடைபெறும்



அருளுடைச் சுடரே அளிந்ததோர் கனியே
பெருந்திறல் அருந்தவர்க் கரசே
பொருளுடைக் கலையே புகழ்ச்சியைக் கடந்த
போகமே யோகத்தின் பொலிவே
தெருளிடத் தடியார் சிந்தையுட் புகுந்த
செல்வமே சிவபெரு மானே
இருளிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

—திருவாசகம்.




# ஸப்தகிரி



மலர்: 8 மார்ச் 1978 இதழ் 10

தனிப்பிரதி 50 காசு.
வருடச் சந்தா ரூ. 6

சிறப்பாசிரியர்:
திரு. பி. எஸ். ராஜகோபாலராஜு,
ஐ. ஏ. எஸ்.,
செயலாட்சித்தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்:
திரு. கே. சுப்பாராவ், எம். ஏ.
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

முழு விவரங்களுக்கு,
Marketing Officer,
Publication Section,
T. T. D. Press Compound,
TIRUPATI-517501.

## உள்ளுறை



அட்டைப்படம்: ஸ்ரீ கோதண்டராம சுவாமி கோயில் உற்சவமூர்த்தி-திருப்பதி.

# ஆசிரியர் உரை

இன்றைய மானிடன் அறிவியல் துறையில் கற்பனைக்கு எட்டா அளவுக்கு, பல முன்னேற்றங்களை ஏற்படுத்தி, அத்துறையில் இன்னும் பல அற்புதங்களைக் காண முயற்சியும் செய்துகொண்டிருக்கின்றான். உண்ணும் உணவிலும், உடுக்கும் உடையிலும் மனிதன் நாளொரு சுவையும் பொழுதொரு வகையுமாக அனுபவித்துக் கொண்டிருக்கின்றான். ஆகவே வாழ்க்கையில் தான் பெற்ற உலகாயுத வசதிகளைக் கொண்டு மனிதன் கவலையின்றி வாழவே முயற்சி செய்கின்றான்; வாழவும் செய்கின்றான். ஆனால் உலகாயுத வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் மனிதனால் பெறப்பட்ட முன்னேற்றங்களும் நாகரிக வசதிகளும், அவனுடைய உண்பதும் உறங்குவதுமாகிய வாழ்க்கையில்தான் அடங்கி விடுகின்றன என்பது தெளிவு. படைப்பின் இயல்புகளான இவ் உண்டு உறங்கும் வாழ்க்கையைத்தான் மிருகங்களும் மேற்கொண்டுள்ளன. இவ் அடிப்படை இயல்புகளிலிருந்து தன்னைச் சற்றுப் பிரித்து உயர்த்திக் காட்டத்தான் மனிதன் தன் பகுத்தறிவினை பயன்படுத்துகின்றான். பகுத்தறிவினால் தான் பெற்ற மொழியின் உதவியால் இலக்கியச்சுவையைப் பெற்றான்; இயற்கையின் அழகை ரசிக்கின்றான். இவ் ரசனைகளே அவனை ஒரு மனிதனாக அடையாளங்காட்டுகின்றன. இது ஒரு சாதாரண மனிதனின் நிலை.

கடலில் உள்ள உப்புக்கரிக்கும் நீரை மாயமாக்கி (ஆவியாக்கி), மீண்டும் தூய நீராக மேலிருந்து பொழியச் செய்யும் விந்(த்)தைக்குக் காரணம் யார்? வினாடி ஒன்றிற்கு பல ஆயிரம் குழந்தைகள் பிறந்திட்டாலும், அவைகளின் முகச்சாயல்கள் சற்றும் ஒத்திருக்காவண்ணம் வேறுபடுத்தும் கலைஞன் யார்? இது போன்ற இயற்கையின் விசித்திரங்களுக்கான காரண கர்த்தாவைப்பற்றிச் சிந்திக்கும்போதுதான் மனிதனின் உள்ளே உறைந்துள்ள தெய்வ உணர்வுகள், ஒழுக்கக் கூறுகள் விழித்தெழுகின்றன. இதன் விளைவாக, முடிந்த மெய்ப்பொருளை ஆய்ந்தறியும் மெய்ஞான அறிவைப் பெற சமயக்கல்வி வேண்டற்பாலதாக உள்ளது. இன்பம் மேலிட அமைதி நிலவுதல் வேண்டும். மனஅமைதியின் உயர்ந்த நிலையே சிறந்த புருஷார்த்தமாகும். இதனைச் சமயக் கல்வி ஒன்றினால் மட்டுமே அடைய முடியும். வாழ்க்கையோடு ஆரம்பமாகும் இக்கல்வி குழந்தையை மனிதனாகவும், மனிதனை மாமேதையாகவும், மாமேதையை தேவ தூதனாகவும் உயர்த்துகின்றது. மனிதனுள் உறையும் தெய்வ உணர்வுகளை வெளிக்கொணர்ந்து அவனையும், அவனைச் சார்ந்தோரையும் நல்வழிப்படுத்தி, அப்பரம்பொருளின் அருட் பேற்றினை அடையச் செய்வது சமயக் கல்வி. உயிரோட்டமுள்ள சிந்தனைகளோடும், செயல்களோடும் கல்வி முறை விளங்கினால்தான் மனிதனால் உயர முடியும்; அவனால் மற்றவரும் உயர்வர். இதற்கு சமயக் கல்வி பெரிதும் துணைபுரிகின்றது.

இத்தகு பயன்மிகு சமயக் கல்வியின் அடிப்படையில் இன்றைய கல்வி முறை விளங்கவில்லை என்றே கூறல் வேண்டும். இன்று பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும் வழங்கி வரும் கல்வி முறை எந்த வகையில் மனிதனைச் சிந்திக்க வைக்கின்றது, எவ்வழியில் அவனை நடத்திச் செல்கின்றது என்பதைச் சற்றே ஆராய்ந்தோமானால், அவை வெறும் மனித இயந்திரங்களை உற்பத்தி செய்யும் தொழிற் கூடங்களாகவே விளங்குகின்றன என்பது கண்கூடு. இச்சமயக் கல்வியின் அவசியத்தை மனதிற்கொண்டே முன்பு குருகுலவாசம் எனும் கல்வி முறை இருந்து வந்தது. ஆன்மிக விழிப்புணர்ச்சி இங்குதான் முதன் முதலாக இளம் உள்ளங்களில் ஒளியேற்றப்பட்டது. மந்திரங்களின் மேன்மை, புராண இதிகாசங்களின் பெருமை, உபநிஷத்துக்களின் அருமை, கீதையின் நன்மை ஆகியவைகள் படிப்படியாக பயிற்றப்பட்டு, பெருமைமிகு நாவலந்தீவின் கலாசார உரைக்கற்களாக மாணவர்களை அன்றைய ஆன்றோர் விளங்கச் செய்து, பெறுதற்கரிய பிறவியாகிய இம்மனிதப் பிறவியில் உயிரின் இலட்சியமான அப்பரம்பொருளை அறிவதற்கான வழியை நாடு தலையே இறுதி குறிக்கோளென அவர்களிடையே உணர்த்தினர். இவ் இலட்சியப் பாதையில் அவர்கள் கற்றது பரம்பொருளின் பேருண்மை மட்டுமன்று. ஒழுக்கம், நேர்மை, சுயக்கட்டுப்பாடு, இரக்கம் போன்ற பண்புக் கூறுகளையும்தான். இத்தகு பெருமைமிகு சமயக்கல்விக்கு பள்ளி நிறுவனங்களில் ஆதரவு இல்லாததால்தான், இன்று, மாணவ சமுதாயம் தங்கள் கொள்கைக் கொவ்வா பிரச்னைகளில் தலையிட்டு தங்கள் இளமையையும் தங்கள் பொன்னான காலத்தையும் இழந்துவருகின்றது. அரசியல் எனும் கோரப் பிடிக்குள் அம்மாணவ சமுதாயம் இன்று அகப்பட்டு அல்லலுறுகின்றது. இம்மாணவ சமுதாயமே நாளை நாட்டை ஆள வேண்டிய பொறுப்பையும் ஏற்க வேண்டியதாயுள்ளது. நாளை நாடு பீடுநடை போட வேண்டுமாயின், அவர்களிடையே கலந்து நிற்கும் பகட்டு வாழ்க்கை, சிற்றின்ப உணர்வுகள், மேலை நாட்டு மோகம் ஆகியவை களைந்தெறியப்பட வேண்டும். இவை நடக்க வேண்டுமாயின், நாளைய மாணவ சமுதாயம் மேன்மையுடன் சிறந்தோங்க வேண்டுமாயின், இன்றைய கல்வி முறை சமயக் கல்வியின் அடிப்படையில் மாற்றியமைக்கப்படல் வேண்டும். ஆம், மீண்டும் குருகுலவாச முறையைப் போன்று, கற்றறிந்த சமயத்தலைவர்களைக்கொண்டு இன்றைய ஆரம்பக் கல்வி முறையைச் செயலாற்றிட அறக்கட்டளைகளும், அரசாங்கங்களும் முன் வரவேண்டும். பாரதம் சமயச்சார்பற்ற நாடாக விளங்கினாலும், அச்சமயங்கள் கூறும் உண்மைகள் ஒன்று, அவை காட்டிடும் நல்வழிகள் என்றும் நன்று என்பதை நினைவிற் வைத்தல் நலம். இன்றைய மனிதன் அறிவுக்கூர்மை நிரம்பப் பெற்றவன்தான். ஆனால் ஒழுங்கற்ற, நேர்மையற்ற அவ்வறிவு தனிமனிதனுக்கும், அவனைச் சார்ந்தோருக்கும் தீமையே விளைவிக்கும். ஆகவே அவனறிவை செம்மைப்படுத்தி, அவனை முழு மனிதனுக்கும் சித்தாந்த நூல்களும், சமயப் போதனைகளும் அவனுக்கு ‘வாழ்க்கை விதி விலக்குகளை நன்கு தெளிவித்து, நல்லறிவு கொளுத்தி, நமன் தொல்லை நீக்கி, நாடு விழையும் நாகரிகம் வழங்கி, இன்ப மளித்து, புகழ் கொடுத்து, நல்வாழ்க்கைமுறையால் அறத்தையும், அதனாற்றான் இறையருளையும் எளிதாக்கும்’ என்பதில் ஐயமில்லை.

“ கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்.”

# பொறுப்பாண்மைக் குழு முடிவுகள்

**20-1-78 அன்று திருமலையில்கூடிய குழு கூட்டத்தின்போது தீர்மானிக்கப்பட்ட சில முக்கிய முடிவுகள் பின்வருமாறு:**

ஆந்திர மாநிலம் ஸ்ரீகாகுளத்தி லுள்ள தேவஸ்தான திருமண மண்ட பத்திற்கான பாத்திரங்களை வாங்கு வதற்கு குழு ரூ. 10,000 ஒதுக்கி யுள்ளது.

டாக்டர் வட்லமுடி கோபால கிருஷ்ணய்யர் அவர்களின் மேற்பார் வையில், திரு. நீமணி வெங்கட நர சிம்ம சாஸ்திரி அவர்கள் எழுதிய தெலுங்கு ரிக் வேதத்தின் பதிப்புரி மையை வாங்குதற்கு குழு ரூ. 50,000 ஒதுக்கியுள்ளது.

திருச்சானூரில் தி. தி. தேவஸ்தான சத்திரங்களை இணைக்கும் வகையில் சுற்றுப்பாதை ஒன்றை அமைக்க, பேருந்து நிலையத்திலிருந்து ஸ்ரீ பத்மா வதி கல்யாண மண்டபம் வரை உள்ள 1.12 ஏக்கர் பரப்புள்ள நிலத்தை வாங்குவதென்று குழு தீர்மானித் துள்ளது.

திருமலையில் ஸ்ரீ வேங்கடேஸ்வரா விருந்தினர் விடுதி, தி. தி. தேவஸ்தான காட்டேஜுகள், திருப்பதியில் விருந் தினர் விடுதி, சத்திரங்கள் ஆகிய வற்றில் இடவசதிகளுக்காக முன்பணம் செலுத்தும் யாத்திரிகளுக்கு உதவி புரி யும் வகையில் குழு கீழ்வரும் சலுகை களை அளிக்க தீர்மானித்துள்ளது! தனி ஒதுக்கீடுகளுக்காக முன்பணம் செலுத் தும் யாத்திரிகர்கள் குறிப்பிட்ட தேதி களில் இடவசதிகளை பயன்படுத்திக் கொள்ள முடியாவிட்டால், தங்கள் இயலாமையை, தனி ஒதுக்கீடு செய் யப்பட்ட அக்குறிப்பிட்ட தேதிக்கு இரண்டு நாட்கள் முன்பே தெரிவித் தால் செலுத்தியத் தொகை திருப்பி அனுப்பப்படும். தங்களுடைய வரு கைத் தேதியை மாற்றிக் கொள்வதாக இருந்தால் தங்கள் எண்ணத்தை இரண்டு நாட்களுக்கு முன்பே தெரி வித்தால், கிடைக்கும் இடவசதியைப் பொறுத்து, அவர்கள் கேட்டுள்ள நாட்களுக்கு அவர்கள் அனுப்பிய தொகைக்கு இடவசதி அளிக்கப்படும். மேலும் இடவசதிகளுக்காக தனி ஒதுக் கீடு வசதிகளைப் பெற்ற யாத்திரிகர் கள் தங்களுக்கு ஒதுக்கப்பட்ட அக் குறிப்பிட்ட தேதிகளில் நாட்கழித்து வந்தாலும் ஒதுக்கப்பட்ட நாட்களுக் குரிய வாடகையை பிடித்துக்கொண்டு அவர்கள் கணக்கிலுள்ள தொகைக்கு ஏற்றவாறு இடவசதி அளிக்கப்படும்.

எல்லா மாநிலத் தலைநகர்களிலும், ஆந்திர மாநிலத்தில் உள்ள எல்லா மாவட்டத் தலைநகரங்களிலும், முக் கிய நகரங்களிலும், கலையரங்குகள் கட்டுவதென்று குழு தீர்மானித் துள்ளது. ஒவ்வொரு கலையரங்கிற்கும் தன் பங்காக தன் உபரி நிதியிலிருந்து தேவஸ்தானம் ரூ. 25 இலட்சம் அல் லது ஒரு கலையரங்கிற்காகும் மொத்தச் செலவில் 25 சதவிகிதம்; இவற்றில் எது குறைவோ அதனை வழங்கும். மேலும் இக்கலையரங்குகள் 'ஸ்ரீ வேங் கடேஸ்வரா கலா மந்திரம்' என்று அழைக்கப்படும்.

மேற்கு கோதாவரி, பாக்கே சுவரம் கிராமத்திலுள்ள ஸ்ரீ கோடிலிங்கே ஸ்வர சுவாமி கோயிலுக்கு மதிற்சுவர் கட்டுதற்கு ரூ. 15,000மும், மேற்கு கோதாவரி போலமூரு கிராமத்தி லுள்ள ஸ்ரீ பட்டாபிராம சுவாமி கோயிலுக்கு வாகனசாலை ஒன்றினை கட்டுதற்கு ரூ. 15,000 மும் வழங்கு வதென்று குழு முடிவு செய்துள்ளது.

ஓய்வு பெற்ற, பெங்களூர் ஆல் இந்தியா ரேடியோவின் நிலைய இயக் குநரான திரு. பி. ரஜனிகாந்தராவ் அவர்களை, தேவஸ்தான கலா க்ஷேத் திரத்தின் சிறப்பு அலுவலராக நிய மிப்பதென்று ஒப்பந்த அடிப்படையில் 3 ஆண்டுகளுக்கு குழு தீர்மானித் துள்ளது.

மதுரை சுவாமி ஸ்ரீ கிருஷ்ணதாஸ் அவர்கள் ஆங்கிலத்தில் எழுதி 'ஸ்ரீமத் பாகவதம்' எனும் நூலின் (நூல் ஒன்று ரூ. 25/-) நூறு பிரதிகளை வாங்கு வதென்று குழு தீர்மானித்துள்ளது.

திருப்பதிலுள்ள ஸ்ரீ வேங்கடஸ்வரா நாட்டிய கலா பரிஷத்திற்கு தன் உபரி நிதியிலிருந்து ரூ. 5,000 வழங்க குழு தீர்மானித்துள்ளது.

குமாரி சுவப்ன சுந்தரி அவர்களு டைய குழுவினரால், அன்னமாச்சார் யா கீர்த்தனைகளைக் கொண்டு அமைக் கப்படும் 'ஸ்ரீ அலமேலு மங்கா விஜயம்' எனும் நாட்டிய நாடகத்தை தேவஸ் தானத்தின் ஆதரவில் அரங்கேற்று வதென்று குழு தீர்மானித்துள்ளது.

ரூ. 3.26 கோடி செலவில், திருமலை யில் ஆகாச கங்கையும், பாபவிநாச மும் சங்கமம் ஆகுமிடத்தில் அணை ஒன்று கட்டுவதென்று குழு தீர்மானித் துள்ளது.

திருமலைக்கு நாள் ஒன்றிற்கு 10 இலட்சம் காலன் அளவு குடி நீர் வழங்கிடும் வகையில், சந்தரகிரி அருகி லுள்ள கல்யாணி குடிநீர் தேக்கத்தி லிருந்து திருமலைக்கு குழாய் வசதிகள் அமைக்க குழு ரூ. 84 இலட்சம் ஒதுக்கி யுள்ளது.

திரு. எஸ். வீராசாமி பாதர் அவர் கள் எழுதிய 'Temple and its significance' எனும் ஆங்கில நூலின் பிரதி களை, அதனை அவ்வாசிரியர் வெளி யிடும்போது, ரூ. 5000/-க்கு வாங்கு வதென்று குழு முடிவு செய்துள்ளது.

ரூ. 70,000 செலவில் நாகலாபுரத் திலுள்ள ஸ்ரீ வேதநாராயண சுவாமி கோயிலுக்கான புஷ்கர்ணி ஒன்றினைக் கட்ட குழு அனுமதித்துள்ளது.

திருப்பதி ஸ்ரீகோதண்டராம சுவாமி கோயிலின் தேருக்கு, ரூ. 30,000 செலவில் புதிய சக்கரங்களைச் செய்வ தற்குக் குழு அனுமதி வழங்கியுள்ளது.

# கம்பன் காணும் கடவுட் கொள்கை

இவ்வுலகில் நிலப் பகுதியினும் நீர்ப் பகுதி மும்மடங்கு என்பர் அறிவியல் நூலார். மாபெரும் அளவினதான இந்த நீர் உலகு முழுவதும் பரவியுள்ளது. பெருங்கடலாகச் சில இடங்களிலும், சிறு கடல்களாகவும், விரிகுடாக்களாகவும், வளைகுடாக்களாகவும் பின்னும் பல இடங்களிலும் பரவியுள்ளது. அம்மட்டோ! பேராறுகளாகக் கம்பீரமாக நகர்ந்து செல்கின்றது. சிறு வாய்க்கால்களாகப் பாய்ந்து செல்கின்றது! மலை வீழருவியாக இரைச்சலுடன் வீழ்ந்து ஓடுகின்றது. மற்றும் ஏரிகள், குளங்கள் சுனைகள் என்றும் பல்வேறு நிலைகளில் இதனைக் காண்கிறோம். மேலும், இந்நீர் ஆவியாக மாறி, மேகமாகிப் பின்னர் மீண்டும் மழையாய் வீழ்கின்றது.

இந்நீரைத் தாவர இனங்களெல்லாம் தத்தம் உறுப்புகளின் மூலம் ஏற்றுக்கொண்டு உயிர் வாழ்கின்றன ஏன்! பி[redacted]யிரினங்களும் (மானிடன் உட்பட)[redacted] வாழ்க்கைக்கு இன்றியமையாத நீரை ஏதோ ஒரு சிறு அளவிலாவது பெற்றே உயிர் வாழ்கின்றன. எனவே, நீர் ஏதாவது ஒரு நிலையில் எங்கும் பரவியுள்ளதைக் காண்கிறோம். அதன் ஒரு சிறு துளியாவது இல்லாத உயிர்ப்பொருளே இல்லை, எனலாம். 'நீரின்றி அமையாது உலகு' என்பது வள்ளுவப் பெருமானின் வாக்காகும்.

ஒரு சிறு செடியைக் காண்போம். அது நீரா எனில், 'ஆம்' நீர்தான் என்றும் சொல்லலாம். அச்செடியில் நீரின் ஒரு துளியேனும் ஏதோ ஒரு வடிவில் இருக்கும். ஆனால், வடிவத்திலும், பிறபண்புகளிலும் அது வேறுபட்டிருப்பதால் அது நீரன்று, செடி என்று நாம் கூறுகின்றோம்.

இவ்வாறே தான் கடவுட் தத்துவமும் உலகெங்கும் பரவிக் கிடக்கின்றது. அது, யாண்டும் நீக்க மற 'எள்ளினுள் எண்ணெய்போல்' கரந்து, நிறைந்துள்ளது எனினும் எல்லாப் பொருள்களிலும் அது ஒரு நியதிப் படியே, முறைப்படியே இயங்குகின்றது.

இறைவன் வேறென்று அல்லது வேறொருவன் என்பதின்றி எங்கும் நிறைந்து, ஒருவனாக வுள்ளான். எனவே, கடவுளை ஒரு பொருள், ஒன்றே என்று கூறுவது பொருத்தம்; உண்மையுமாகும். ஆனால், அப்பரம் பொருள் எல்லாப் பொருள்களிலும் மறைந்து அவ்வவற்றின் வடிவமாகவும் உள்ளதனால், அதனைப் பல என்றும் கூறலாமன்றோ!

ஒன்றெனப் பலவென அறிவரும் வடிவினுள் நின்ற
நன்றெழில் நாரணன்......

(திருவாய்மொழி 1-3-7)

என்ற நம்மாழ்வார் பாசுரமும் இங்ஙனம் இறைவன் ஒன்றாகவும் பலவாகவும் உள்ள நிலையைக் குறிப்பிடுதல் காண்க.

இவ்வாறே, உலகிலுள்ள எப்பொருளைக் குறித்தும் இஃது இறைவனா? என்று வினவின், இஃது அன்று இறைவன் என்று சொல்வதும் பொருத்தம் ஆயினும், எங்கும் நிறைந்த இறைவ[redacted]து ஒரு கூறுதானே அப்பொருளும்! அவ்வாறு நோக்கின் 'அன்று' என்பதற்கு எதிரிடையாக ஆம் என்று கூறவும் இந்நிலை இடந்தருகின்றது.

இனி, பார்க்குமிடந்தோறும் நீக்கமற நின்று யாவற்றையும் இயக்குவதால் இறைவனை உண்டு (உளன்)


வித்துவான் ச. ரா. நச்சபேசுவரன் M.A.
சென்னை-3.


என்று சொல்வதில் ஏதும் இடர்ப்பாடில்லை. ஆனால், எல்லாப் பொருள்களிலும் இக்கடவுள் தத்துவம் நிறைந்திருப்பினும், தொன்றுதொட்டு வரும் ஏதோ ஒரு முறைப்படியே, நியதிப்படியே அன்றோ, எல்லாப் பொருள்களின் இயக்கமும், உயிர்களின் தோற்றம், வளர்ச்சி, மறைவு ஆகியவைகளும் நடைபெற்று வருகின்றன; இறுதியில் அம்முறை எஞ்சி நிற்கின்றது! அதனால் இறைவன் செயலாகக் கூறத் தேவையில்லாத நிலைமையும் தோன்றுகிறது. எனவே, கடவுள் இல்லை என்றும் கூறலாமன்றோ! இந்நியதி (முறை) பிரபஞ்சம் முழுவதும் பரவிக் கிடப்பதால், இவற்றை ஆராயும் மனமும், ஆணவமாகிய 'யான்' என்பதும் அக்கடவுள் தத்துவத்தினுள்

ஸ்ரீ வெள்ளீஸ்வரர்,
திரு. கண்ணன்-திருவிடை மருதூர்.



அடங்கிவிடுகின்றன. கடவுள் 'இல்லை' என்பார்க்கும் அக்கடவுள் 'இல்லை' என்பதற்குக் கருத்தாவாய்த் தோன்றுகிறான்.

மேலும், ஒரு பொருளை நாம் இல்லை என்று கூறுங்கால் காலத்தையும் (Time and Space) தொடர்பு படுத்தியே கூறுகின்றோம். உதாரணமாக ஒரு பானையைக் குறித்து, அது 'இல்லை' என்றால், அப்பானை இப்பொழுது, இங்கு இல்லை என்றே எண்ணுகிறோம். இங்கு இல்லை என்றால் வேறொரு இடத்தில் இருக்கலாம் என்று கொள்ள இடந்தருகின்றது. இப்பொழுது இல்லை என்றால், முன்னர் இருந்திருக்கலாம் அல்லது பின்னர் உண்டாகலாம் என்றுகிறது. எனவே, எப்பொருளையும் எங்கும் எப்பொழுதும் இல்லையென்று கூற இயலாதன்றே! 'உண்டு' என்பதும் 'இல்லை' என்பதும் இரு வெவ்வேறு நிலைகள்; இயல்புகள். உருவ, அருவ நிலைகள் எனக்கொள்ளலாம். இவ்விரு குணங்களையும் கொண்டவன் இறைவன். 'உண்டு' என்ற சொல்லாலும் 'இல்லை' என்ற சொல்லாலும் சொன்ன இரு நிலைகளாலும் அவன் உளன்.

கடவுள் நிலையைக் கூறப் புகுந்த கம்பர் பெருமான் கடவுளது இத்தகைய முரண்பட்ட தன்மைகள் அவரிடம் ஒருங்கே அமைந்திருத்தலைக் காண்கிறார்; வியக்கிறார். அவர் கடவுள் தத்துவத்தை உணர்த்தும் முறையைப் பின்வரும் 'கடவுள் வாழ்த்துப்' பாடல் கவினுறச் சித்திரித்துக் காட்டுகின்றது.

'ஒன்றே யென்னில் ஒன்றேயாம்
பலஎன் றுரைக்கில் பலவேயாம்,
அன்றே யென்னில் அன்றேயாம்
ஆம்என் றுரைக்கில் ஆமேயாம்,
இன்றே யென்னில் இன்றேயாம்
உளதென் றுரைக்கில் உளதேயாம்,
நன்றே நம்பி குடி வாழ்க்கை!
நமக்கிங் கென்னே பிழைப்பம்மா!

(யுத்த காண்டம்)

நம் தலைவனை இறைவன் இவ்வாறிருக்க அவனது கருவியாகவுள்ள நமக்குச் செயலேது? வாழ்வேது? என்கிறார். அவனது இத்தகைய பண்புகளையெல்லாம் நன்குணர்ந்து அறிவது மெய்யுணர்வு பெற்ற ஞானிகளுக்கன்றோ இயலும்! நம்மைப் போன்ற புல்லறிவு பெற்றவர்களுக்கு இவ்வாறுள்ள பொருளை அறிந்து வாழ்வது எங்ஙனம் இயலும் என்று கருதுகிறது கம்பர் உள்ளம். எனவே, 'நமக்கிங்கு என்னே பிழைப்பு' என்கிறார். இதனால் அவ்விறைவன் தன் ஒப்புயர்வற்ற பெருங்கருணையால் நம்மைக் காக்கின் அல்லது நாம் உய்ய வழியில்லை என்பதாம். ஏன்? அவனை வணங்குவதற்கே அவன் அருள் வேண்டும் என்று கூறுகின்றார் அடியார். 'அவனருளாலே அவன் தாள் வணங்கி' என்பது மணிவாசகர்

மற்றும், கம்ப நாட்டாழ்வாரது இப்பாடலில்,

"உளன் எனில் உளன், அவன்
உருவம்இவ் வுருவுகள்;
உளன்அலன் எனில்அவன்
அருவம்இவ் அருவுகள்,
உளன்என, இலன்என,
இவைகுணம் உடைமையில்
உளன்இரு தகைமையொடு,
ஒழிவிலன் பரந்தே"

(திருவாய்மொழி 1-1-9)

என்ற நம்மாழ்வார் பாசுரத்தில் கூறப்படும் இறைமைப் பண்புகளும் கையாளப் படுவதைக் காணலாம்.

★

*Statement about ownership and other particulars about*

## SAPTHAGIRI
## (MONTHLY)

FORM IV

(*See Rule* 8)

| | | | |
|---|---|---|---|
| 1 | Place of publication | ... | TIRUPAT . |
| 2 | Periodicity of its publication | ... | Monthly |
| 3 | Honorary Editor | ... | Sri P. S. Rajagopala Raju. I.A.S. Executive officer, T.T.D. |
| 4 | Printer's Name | ... | Sri M. Vijayakumar Reddy |
| | (Whether citizen of India ) | ... | Yes |
| | Address | ... | Manager, T.T.D. Printing Press, Tirupati. |
| 5 | Editor & Publisher's Name | ... | K. Subba Rao, M.A., |
| | (Whether citizen of India ) | ... | Yes |
| | Address | | Editor, T.T.D. Sapthagiri Journal, Tirupati. |
| 6 | Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital. | ... ... | Tirumala Tirupati Devasthanams represented by its Executive Offic T. T. D. Tirupati. |

*I, K. Subba Rao, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.*

TIRUPATI,
Date : 20-2-1978

(*Sd.*) **K. SUBBA RAO,**
EDITOR & PUBLISHER,
*Tirumala Tirupati Devasthanams, Tirupati.*

# முப்புனிதவதிகள்

நம் நாட்டில் ஞானியர் பலர் தோன்றினர்; அவர்களில் சிலர் கவிஞர்களாக விளங்கினர். தமிழினம் செய்த தவத்தால், மூவர் நம் நாட்டில் புகழடைந்தனர். ஔவை பிராட்டியார், சூடிக்கொடுத்த நாச்சியார், காரைக்கால் அம்மையார். இப் புனிதவதிகளை ஒருங்கே, அவர்களுடைய தெய்வீக வாழ்க்கையில் அவர் இயற்றிய நீதிநெறிகளில், காண்போம்.

முதற் பகுதி

## ஔவை பெருமாட்டியின் பெருமை

பாண்டி மண்டலத்தின் தலைநகராகிய மதுரைமா நகரத்தில், கடைத் தமிழ்ச் சங்கம் இருந்தது. இக்கடைச் சங்க காலத்தில் முப்பது பெண்பாற் புலவர் இருந்தனர். அம்முப்பதின்மருள், தலையானவர் ஔவையார். கி. மு. முதல் நூற்றாண்டில் தோன்றிய ஔவையாரின் பாடல்களில் வீரம் அன்பு ஆகிய அத்தனையுமுண்டு. இம் மூதாட்டிக்குள்ள இடம் தனியானது. அவர் உலகத்தின் முக்கிய கவியாவார். மற்றும், அவர் பக்தி வளர்ச்சிக்குக் காரணமாயிருந்தார் என்று கூறினால் மிகையாகாது.

## சக்தி பிறக்குது மூச்சினிலே

ஔவையார் என்னும்பெயர் இரண்டாயிரம். ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழ் இலக்கியங்களிலே இடம் பெற்றிருக்கிறது. அன்று தொட்டு இன்று வரை அந்தப் பெயர் தமிழர் வாழ்விலே பிணைந்து, பிரியாத நிலைபெற்று விட்டது. 'ஔவை' என்னும் சொல் 'அன்னை' என்னும் பொருளில் இலக்கியங்களிலே கூறப்படுகிறது. மக்கள் பேச்சு வழக்கிலே 'பாட்டி' 'கிழவி' என்னும் பொருளில் வழங்கிவருகிறது. தெலுங்கில் 'அவ்வ' என்றும், கன்னடத்தில் 'அவ்வை' என்றும் உச்சரிக்கப்படுகிறது.

நாட்டு சேவையே பெரிது என, ஔவைபிராட்டி, அநேக ஆண்டுகள் வாழ்ந்து, பெரியோர் — சிறியோர், நிதி படைத்தோர், பாமரர், ஆண், பெண், எல்லோருக்கும் தமிழ்த் தாயாகக் காலத்தைக் கழித்து வந்தார். ஔவை என்ற சொல் கேட்டாலேயே, நம் மூச்சினிலே ஓர் சக்தி பிறக்கின்றது. தெய்வீகத்தில் இடையுறாது வாழ்ந்த நம் பெருமாட்டி, முற்பிறப்பில் செய்த தவ வலிமையால், திருமணத்தை வெறுத்து, சிவபக்தி மிகுதியால் யோகியாகக் காலங் கழித்து, பின்னர் முத்தியடைந்தார். இம்மூதாட்டியின் பிறப்பு வளர்ப்பை ஆராய்வோம்.

## பிறப்பு, வளர்ப்பு, வாழ்வு.

பகவன் ஆதியை மணம் புரிந்தான். ஆயினும் திருமணம் புரிந்த ஐந்தாம் நாளன்று, தன் மனைவி தலையில் தான் முன் அடித்த வடு இருக்கக் கண்டு, இவள் ஆதியளே (பழைய பெண்ணே) என்பதறிந்து, அவளை வெறுத் தொதுக்கி வெளியேறினன். ஆயினும் ஆதி அவனை விடாமல், தன் குலதர் மத்திற்குக் குறைவு வராமல், கணவனைப் பின் தொடர்ந்தாள். இதைக் கண்டு இரக்கமுற்ற பகவன், அவளுடன் கூடி வாழ்க்கை நடத்த நிபந்தனை விதித்தான். ஆதிக்குக் குழந்தைகள் பிறந்தால், அவற்றைப் பிறந்த இடத்திலேயே விட்டு, அவனைப்பின் தொடரவேண்டும் என்பது நிபந்தனை. பெண் தர்மம் ஆதியை அகலவில்லை. கல் மனதாகிய கணவனின் ஆக்ஞைக்குட்பட்டாள். அவன் பின் சென்றாள். இருவரும் கணவனும் மனைவியாக வாழ்ந்து வந்தனர்.

நாட்கள் சென்றன; ஆதி கருவுற்றாள். நாடு கடந்து செல்லும் காலத்தில், வழியில் பாணர் சேரியில் ஒரு நாள் இரவு, ஓர் பெண் மகவை ஆதி பெற்றாள். சிவபெருமான் திருவுள் ளப்படி கலைமகளானவள் ஔவையாக அவதரித்தாள்.

தன் கணவருக்குத் தான் உறுதி மொழி கூறினாலும், பிறந்த குழந்தையை விட்டுப் பிரிய மனம் இடந்தரவில்லை. அக்குழந்தையின் திருமுகம் நோக்கி அவதிப்பட்டாள். அன்னையின் துயர் கண்ட அத்தெய்வீகக் குழந்தை அச்சமயத்தில் தன் சிறு வாயால், பாடிய சொற்கள் நம் மனதை உருக்குகின்றன;

" இட்டமுடன் என்தலையில் இன்னபடி
என்றெழுதி
விட்டசிவ னும்செத்து விட்டானோ—
முட்டமுட்டப்
பஞ்சமே ஆனாலும், பாரம்
அவனுக்கு அன்னாய்!
நெஞ்சமே அஞ்சாதே நீ"

இவ்வார்த்தைகளைக்கேட்கவே, ஆதி ஆறுதல் அடைந்து, குழந்தையை விட்டேகினள். சேரியிலுள்ள பாணர்கள் அக்குழந்தையை எடுத்து வளர்த்து

Dr. G. T. கோபாலகிருஷ்ண நாயுடு.

வரவே, சகல கலைகளையும் அறிந்து, சிறந்த பெண்ணாக முதன்மை பெற்றனள்.

## ஔவையின் உடன் பிறந்தோர்

கபிலரகவலில் கண்ட செய்யுளின்படி ஔவையுடன் அறுவர் பிறந்தனராகத் தெரிகிறது. கபிலரும், வள்ளுவரும், அதியமானும் ஆண் மக்கள். மற்ற மூவர் பெண் இனத்தார். தகடூர் மன்னன் அதியமானுடன் ஔவை அதிகப் பற்று கொண்டிருந்தார். மன்னனே தன் சகோதரியுடன் எல்லையற்ற அன்பும், அவரது தெய்விகப் புலமை

காரணமாக, அவரிடம் ஆழ்ந்த பக்தியும் கொண்டிருந்தான்.

ஒரு நாள், மலையுச்சியில் அடர்ந்த காட்டிலிருந்து தான் கொண்டுவந்த நெல்லிக் கனியொன்றை ஔவைக்குத் தந்தான், அதியன். அக்கனியை அருந்தியவர் நெடுங்காலம் வாழ்வார் என்ற உண்மையை, ஔவை, உண்டபின் அறியவே, அதியனின் தியாக உணர்வை மெச்சி, அதியன் நெடுங் காலம் வாழ, மனங்குளிர வாழ்த்தினர். அதியன் தந்த நெல்லிக்கனியை உண்டு வெகுகாலம் ஜீவித்திருந்தார், நம் பெருமாட்டி. ஔவையார், மன்னன் அதியமானின் அரசவைப் புலவராக இருந்து, தம்மை ஆதரித்த மன்னன் மாவீரத்தைப் போற்றியும், கொடைக் குணத்தைப் புகழ்ந்தும் இருபது மேற்பட்ட பாடல்களைப் பாடியுள்ளார்.

## இயற்றிய மற்ற நூல்கள்:

ஔவையாரால் இயற்றப்பட்ட நீதி நூற்கள் அற்புதமானவை — ஆத்தி சூடி, கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி ஆவன. சமய நூற்களும் ஔவையாரால் இயற்றப்பட்டன— ஞானக் குறள், விநாயகரகவல், வேழ முகம் என்பன. வீட்டின்பந்தரும் 'ஞானம்' என்பதனை அடைமொழியாக்கி, 'ஞானக் குறள்' என்னும் பெயரில் தனி நூல் செய்து முடித்தார். 'விநாயகரகவல்', 'வேழ முகம்' எனப் பெயர் கொண்ட நூல்கள், விநாயக சதுர்த்தசி விழாவன்று பாடக் கேட்டுள்ளோம். தத்துவக் கருத்துகளமைந்த நூல்கள் அவை.

'மூதுரை'யின் முதல் வாக்கியம் ''வாக்குண்டாம்'' என்ற சொல்லில் ஆரம்பமாகிறது. இச்செய்யுளில், 'விநாயகரை வணங்குவோர்க்கு விரும்பிய எல்லாம் கிடைக்கும்' என ஔவை பெருமாட்டிப் பகர்கிறார்.

'' வாக்கு உண்டாம்; நல்ல மனம்
உண்டாம்; மாமலராள்
நோக்குஉண்டாம்; மேனிநுடங்காது;—
பூக்கொண்டு
துப்புஆர் திருமேனி தும்பிக்கையான்
பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு''

விநாயகரை வழிபட்டால், நல்ல சொல்வளம் உண்டாகும்; நல்ல மன வளம் உண்டாகும்; செந்தாமரை மலரில் எழுந்தருளியுள்ள திருமகளின் திருவருட் பார்வை உண்டாகும்; நோய் நெருங்காது. ஆகவே விநாயகக் கடவுளை அன்புடன் வணங்கிச் சொல்லின் செல்வர்கள் ஆகவும், மனநலம் வாய்ந்தவர்களாகவும், ஆரோக்கிய அமைப்புப் பெற்றவர்களாகவும், யாவரும் இன்ப வாழ்வு வாழ்வார்கள்.

தும்பிக்கையானுகிய விநாயகக் கடவுள் சிவபெருமானின் மூத்த குமாரர். இவரை ஔவை பிராட்டியார் தன் ஆயுள் முழுவதும் வழிபட்டார்.

விநாயகர் பிரணவ ஸ்வருபி. துதிக்கையோடு இருக்கிற அவர் சிரசு, கையிலே இருக்கும்படியான மோதகம், இவற்றையெல்லாம் சேர்த்துப் பார்த்தால், பிரணவமே எனத் தீர்மானிக்கலாம். அந்தப் பிரணவத்தைப் புருவத்தின்மத்தியில் தியானம்பண்ணிக்கொண்டிருந்தால், குண்டலினி சக்தி ஸஹஸ்ராரத்திற்கு எழுப்ப வகையுண்டு.

'ஆத்தி சூடி—108' என்னும் நூல் மக்களால் பெரிதும் பாராட்டப்பட்டு வருகின்றது. ஆத்திசூடி என்ருல் பரமேசுவரனுக்குப் பெயர். ஆத்திப்பூ

(33ஆம் பக்கம் பார்க்க)



# திருமலையில் கைசிக புராணம்

புராணங்கள் பல உள்ளன. அதில் கைசிக புராணத்திற்கு முக்கிய ஏற்றம் உண்டு. அதற்குக் காரணம் இந்த புராணவைபவத்தை வராஹப் பெருமாள் பூமி பிராட்டிக்கு எடுத்துச் சொல்வதாக அமைந்திருப்பதுதான்.

பிரதி பருஷம் கார்த்திகை மாத சுக்லபக்ஷ த்வாதசி அன்று ஸ்ரீ வைஷ்ணவ திவ்ய தேசங்களிலுள்ள திருக்கோயில்களில் கைசிக புராணத்தை ஸேவிக்கும் (வாசிக்கும்) உத்ஸவம் நடப்பதைக் காணலாம். திருமலையிலும் இவ்வுத்ஸவம் விசேஷ வைபவத்துடன் நடக்கும். ஹரிஜனுகப் பிறந்த ஒரு பக்தன் பகவானைப் பாடி மோக்ஷம் அடைந்ததோடன்றி, பாபயோனியில் பிறந்த ஒரு பிரம்ம ராக்ஷஸனுக்கும் மோக்ஷம் தேடித்தந்ததாக இப்புராணம் கூறுகிறது.

## புராண வரலாறு

நம்பாடுவான் என்கிற ஒரு ஹரிஜன பக்தன், பெரியவர்கள்மூலம் பகவானை தரிசிக்க கார்த்திகை மாத சுக்ல பக்ஷ த்வாதசீ சிறந்த தினம் என அறிந்தவனுய் பிரம்மமுஹூர்த்தத்திலே தக்ஷிண திக்பாகத்திலே உள்ள 'திருக்குறுங்குடி' என்கிற திவ்ய தேசத்திலுள்ள எம்பெருமானை தரிசிக்கப் புறப்பட்டான். நடுவழியில் காட்டில் ஒரு பிரம்மராக்ஷஸனிடம் அகப்பட்டுக் கொண்டான். உடனே நம்பாடுவான் அந்த பிரம்ம ராக்ஷஸனைப் பார்த்து 'சிற்றஞ்சிறு காலே பகவானை தரிசிக்கப் போகிறேன். என்னை விட்டு விடுவாயாக' என்றுன். மனுஷ்ய மாமிசத்தில் ஆவல்மிக்க பிரம்ம ராக்ஷஸனே நம்பாடுவானைப் பார்த்து 'நான் பல நாட்களாக பட்டினியாயிருக்கிறேன். ஆகையால் உன்னைவிடப்போவதில்லை. உன் அவயவங்களை தனித்தனியாகப் பிரித்து, உதிரமாமிசங்களைக்கொண்டு என் பசியை தீர்த்துக் கொள்ளப் போகிறேன்' என்றுன். அதற்கு நம்பாடுவான்பிரம்மராக்ஷஸனைப் பார்த்து 'எனக்கு ஒரு விரதம் உள்ளது. அதன்படி பகவான் ஸந்நிதிக்குச் சென்று பகவானைப் பாடி, மகிழ்ந்து, தரிசித்துவிட்டு உன்னிடமே வந்துசேருகிறேன். உன் விருப்பப்படி என்னை உனது உணவாக ஆக்கிக் கொள்' என்றுன். அதற்கு பிரம்மராக்ஷஸன், 'யாராவது என்னிடம் அகப்பட்டுக் கொண்டவன் தப்பிப் போய் திரும்பவும் வருவானு? இது நடைபெறக் கூடிய காரியமா' என்றுன். அதற்கு நம்பாடுவான் 'உலகம் உண்டானதும் ஸத்யத்தாலேதான். உலகம் நிலை பெற்றிருப்பதும் ஸத்யத்தாலேதான். ஆகையால் நான் கட்டாயம் திரும்பி உன்னிடமே வந்து சேருவேன். இது சத்தியம்' என்று கூறி பலவிதமாக ஸத்தியம் செய்து கொடுக்கிறுன். தான் திரும்பவும் அவனிடம் வராமல் போனுல், உலகத்தில் ஸத்தியத்தை தப்பினவர்கள் அனைவருடைய பாபமும் தன்னைச் சேரும் என்றும், மன்மத பீடிதனுய் பிறன் மனைவியிடம் மையல் கொள்பவன் பாபம் தன்னைச் சேரும் என்றும், பலர் உண்ணும் இடத்தில் ஏற்றத்தாழ்வாக 'பாகபேதம்' (உணவில் ஏற்றத்தாழ்வு) பண்ணுகிறவன் பாபம் தன்னைச் சேரும் என்றும், பூமியை தானம் செய்துவிட்டு பிறகு

திரு. எஸ். என். விஜயராகவன்,
திருப்பதி.

# திருமலையிலும் திருப்பதியிலும் உணவு வசதிகள்

நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து யாத்திரை மேற்கொள்ளும் யாத்திரிகர்களின் அடிப்படை பிரச்னைகள், அவர்கள் போகும் இடங்களில் அமையும் தங்குவதற்கான இருப்பிடமும், உண்ணும் உணவும்தான். இதை மனதிற்கொண்டுதான் தி.தி. தேவஸ்தானம் திருமலையிலும் திருப்பதியிலும் யாத்திரிகர்கள் தங்குவதற்காக இலவச சத்திரங்கள் பலவற்றையும், வசதியான காட்டேஜுகள் பலவற்றையும் கட்டியுள்ளது. இவை எவ்வகையில் உதவியாக அமைந்துள்ளன என்பது திருமலைக்கு வருகை புரியும் ஒவ்வொரு யாத்திரிகருக்கும் நன்கு தெரியும். அடுத்து எழுவது உணவுப் பிரச்னை. திருமலையில் தனியார் உணவு விடுதிகள் பல இருந்தாலும், சுகாதாரமான முறையில் செய்யப்பட்டு, நியாயமான விலையில் வழங்கப்படும் உணவு வகைகள் தேவஸ்தானத்தாரின் உணவு விடுதிகளிலும், மற்றும் தேவஸ்தானத்தாரால் குத்தகைக்கு விடப்பட்டுள்ள தனியார் நடத்தும் சில சிறந்த உணவு விடுதிகளிலும் மட்டுமே கிடைக்கும். இவற்றைப் பற்றிய சில அடிப்படை விவரங்கள், யாத்திரிகர்களின் நன்மையின் பொருட்டு கீழே வழங்கப்பட்டுள்ளன.

### அன்னபூர்ணா ஹோட்டல்

*(சங்கு மிட்டா காட்டேஜ் அருகில்)*

சிற்றுண்டி நேரம்: 5 A.M. to 10 P.M.
சாப்பாடு நேரம் : 9 A.M. to 3 P.M.
6 P.M. to 10 P.M.

அளவு சாப்பாடு ரூ. 1-75
முழுசாப்பாடு ரூ. 3-00

(சனிக்கிழமைகளில் பாயசம் வழங்கப்படும்)

இவற்றைத்தவிர கார வகைகளும், குளிர்பானங்களும், சூடான பானங்களும் இங்குக் கிடைக்கப் பெறலாம்.

---

### உட்லேண்ட்ஸ் ஹோட்டல்

*(தி. தி. தேவஸ்தான விருந்தினர் விடுதிக்கு அருகில்)*

சிற்றுண்டி நேரம் : 6 A.M. to 10-00 P.M.
சாப்பாடு நேரம் : 11 A.M. to 2-30 P.M.
6 P.M. to 10-00 P.M.

தமிழ்நாடு சாப்பாடு ரூ. 4-00
வடஇந்தியச் சாப்பாடு ரூ. 6-00
அளவு சாப்பாடு ரூ. 1-75

இவற்றைத் தவிர இனிப்பு வகைகளும், குளிர் பானங்களும் நியாயமான விலையில் இங்குக் கிடைக்கும்.

---

### காஃபி போர்டு

*(கல்யாண கட்டாவிற்கு அருகில்)*

சிற்றுண்டி நேரம் : 5 A.M. to 10 P.M.

மினி காஃபி (4 அவுன்ஸ்) 40 காசு
ஒரு கோப்பை காஃபி (6 அவுன்ஸ்) 60 காசு

இவற்றைத் தவிர சிற்றுண்டி மற்றும் குளிர் பானங்கள் போன்ற வசதிகளும் உள்ளன.

இந்நிறுவனத்தாரின் மற்றொரு கிளை பி. பி. ஷெட்டிற்கு (க்யூ ஷெட்டிற்கு) அருகில் உள்ளது.

வேலை நேரம் : 5 A.M. to 10 P.M.

தயிர்சாதம் (ஒரு பாக்கெட்) ரூ. 0-60
எலுமிச்சை சாதம் ,, ரூ. 0-60

குளிர்பானங்களும் கிடைக்கும்.

### டீ போர்டு

*(ஆழ்வார் ஏரிக்கு அருகில்)*

வேலை நேரம் : 6 A.M. to 11 A.M.
2 P.M. to 6 P.M.

டீ 25 காசு.
ஆம்ப்ரோ க்ளுகோ பிஸ்கட்டுகள்
(ஒரு பாக்கெட்) 75 காசு.

---

### தி. தி. தேவஸ்தான விருந்தினர் விடுதி

சிற்றுண்டி நேரம் : 6 A.M. to 9 A.M.
3 P.M. to 6 P.M.
சாப்பாடு நேரம் : 11 A.M. to 2 P.M.
7 P.M. to 9 P.M.

முழு சாப்பாடு ரூ. 3-00

இவைத்தவிர கார வகைகளும், இனிப்பு வகைகளும் குறைந்த விலையில் கிடைக்கும்.

(சாப்பாட்டுக்கும், சிற்றுண்டிக்கும் 3 மணி நேரத்திற்கு முன்பாகவே தங்கள் தேவைக்கு தகவல் தருதல் அவசியம்)

---

### திருப்பதியில் தி. தி. தேவஸ்தான உணவு விடுதி

*(இரண்டாவது புதிய சத்திரத்திற்கு அருகில்)*

சிற்றுண்டி நேரம் : 5 A.M. to 9-30 A.M.
2-30 P.M. to 6 P.M.
சாப்பாடு நேரம் : 10-30 A.M. to 2 P.M.
6-30 P.M. to 9 P.M.

அளவு சாப்பாடு ரூ. 1-50
தயிர் (ஒரு கப்) ரூ. 0-40

இதைத் தவிர சிற்றுண்டி வகைகள், ஆம்ப்ரோ க்ளுகோ பிஸ்கட்டுகள், குளிர்பானங்கள் முதலிய உணவு வசதிகளும் உண்டு.

தி. தி. தேவஸ்தானத்தின் முதல் சத்திரத்தில் உள்ள மற்றொரு தேவஸ்தான உணவு விடுதியிலும் சாப்பாட்டைத் தவிர மற்றைய சிற்றுண்டி வகைகள் குளிர் பானங்கள் போன்ற வசதிகள் காலை 5 மணி முதல் இரவு 9 மணி வரை யாத்திரிகர்களுக்குக் கிடைக்கும்.

அதைக் கொடுக்காமல் ஏமாற்றுகிறவனுடைய பாபம் தன்னைச் சேரும் என்றும், ரூபவதியான ஸ்திரீயை யௌவன காலத்தில் அனுபவித்து விட்டு பிறகு தோஷம் கற்பிக்கிறவன் பாபம் தன்னைச் சேரும் என்றும், அயலானுடைய அன்னத்தை உண்டு விட்டு உண்ட இடத்திலேயே தயை இல்லாமல் துரோகம் நினைப்பவன் பாபம் தன்னைச் சேரும் என்றும், கன்னிகையை மணம் செய்து கொடுப்பதாகக் கூறி ஏமாற்றுகிறவனுடைய பாபம் தன்னைச் சேரும் என்றும், ஷஷ்டி, அஷ்டமி, அமாவாசை இம்மாதிரியான நாட்களில் நீராடாமல் உண்பவன் பாபம் தன்னைச் சேரும் என்றும், எவனொருவன் ஆசாரியனுடைய மனைவியை அல்லது அரசனுடைய மனைவியை அடைய எண்ணுகிறானோ அவனுடைய பாபம் தன்னைச் சேரும்என்றும், எவனொருவன்தாகத்துடன் நீர் அருந்த வரும் பசுக் கூட்டங்களை விரட்டியடிக்கிறானோ அவனுடைய பாபம் தன்னைச் சேரும் என்றும், எவனொருவன் இரண்டு பெண்களை விவாஹம் செய்து கொண்டு ஒருவளுடன் ஆனந்தமாக வாழ்க்கை நடத்திக் கொண்டு மற்றவளை உபேக்ஷை செய்கிறானோ அவனுடைய பாபம் தன்னைச் சேரும் என்றும், மேலும் தர்ம சாஸ்திரங்கள் கூறும் அநேக பாபங்களும் தான்திரும்பவராமல் போனால்தன்னைச் சேரட்டும் என்றும் சத்தியம் செய்து கொடுத்தான். இவ்வளவையும்கேட்ட பிரம்மராக்ஷஸன் அவனைப் பார்த்து, 'உன் விரதப்படி பகவானைத் தரிசித்து விட்டு என்னிடம் வா' என்றான். பிறகு நம்பாடுவான் மகிழ்ச்சியுடன் கோயிலுக்குச் சென்று பகவானைத் தரிசித்து ஆடிப்பாடி அகமகிழ்ந்து திரும்பவும் தான் கொடுத்த ஸத்ய வார்த்தையை நிறைவேற்ற பிரம்மராக்ஷஸன் இருக்குமிடம் வந்தான். நடுவழியில் வயதான ஒரு மனிதன் நம்பாடுவானைப்பார்த்து 'நீ எங்கே போகிறாய்?' என்று கேட்டான். அதற்கு அவன் பிரம்மராக்ஷஸனுக்கு தான் கொடுத்துள்ள ஸத்தியத்தின்படி அரக்கனிடம் போவதாகக்

# நெஞ்சு விடு தூது

புலவர். சி. கோபாலகிருஷ்ணன் எம்.ஏ., திண்டிவனம்.

திண்டிவனத் தின்வழியே திருப்பதிசெல் பேருந்து
பண்டுபுகழ்ப் புதுவையிருந் தேபுறப்பட் டோடிவரும்;
கண்டதனில் ஏறிடுவாய்! காசளித்தே அமர்ந்திடுவாய்!
கொண்டதொரு பத்தியினல் கும்பிடப்போகும் நெஞ்சே!

இரவுபதி னொருமணிக்கே இங்கிருந்தே புறப்பட்டால்,
சிரமமில் லாமல்நீயும் திருப்பதிக்கு நண்பகலில்
வரலாமே; சத்திரத்தில் உணவருந்தி வழிஇளைப்பை
ஒருவாறு போக்கியபின் உயர்வரிசை யிலேநிற்பாய்!

மலையேறும் பேருந்தில் மகிழ்ச்சியுடன் இடம்பெறுவாய்!
அலையலையாய் இயற்கையெழில் அண்ணல் அவனருளால்
நிலையாகக் காட்சிதர நீயினிதே காண்பாயே!
உலையாமல் ஓடிவரும் ஒளியருவி யெலாம்காண்பாயே!

ஆழ்வார்தீர்த் தம்ஒன்றும் அடிவாரத் தேவிளங்கும்;
மூழ்கியெழுந் தாலுனக்கே முத்தியெலாம் சித்திக்கும்;
மூழ்கிடுவாய்! நன்னெஞ்சே! முணுமுணுப்பாய்! கோவிந்தா!
ஊழ்வினையின் பிறப்பறுப்பாய்! உயர்பாதம் சேர்ந்திடுவாய்!

ஏழுமலை ஏறுங்கால் இருமருங்கும் எழிற்காட்சி
சூழுமின்னல் தாம்மறப்பாய்! சுகமாக வருந்தென்றல்
வாழ்வளிக்க இன்புறுவாய்! வாயாரப் போற்றிடுவாய்!
தாழ்வகற்றும் எம்பெருமான் தாமோதரன் காண்பாய்;

திருமலைமேல் பெருங்கோயில் தெய்வீகக் கோபுரத்தை
அருகணையும் போதெல்லாம் அகந்தைநீங்கக் காண்பாய்!
பெருமானின் கருவறையோ? பேரொளிசேர் தங்கமயம்
உருகிடுவாய்! ஒடுங்கிடுவாய்! பணிந்திடுவாய்! என்நெஞ்சே!

கோனேரித் தீர்த்தத்தில் குளிர்புனலில் மூழ்கிடுவாய்!
வானோரும் வந்துபணி மலைவாழும் வேங்கடவன்
தானேவந் தேயிருந்தே தந்தருள்வான் வரமெல்லாம்;
தேனூறும் அவன்காணத் திருக்கூட்டம் நெரித்திடுமே!

திருநாமம் முகம்பொலியத் தெய்வீகப் பொலிவோடும்
வரும்போதே உனைக்காண்பார் வரிசையிலே இடமளிப்பார்;
திரும்பாமல் சென்றிடுவாய்! சிந்தையிலே மகிழ்ந்திடுவாய்!
பொருந்தியுள இடமமர்ந்து பொறுமையுடன் செல்வாயே!

மணிசிலவே யானாலும் வரந்தருவான் எம்பெருமான்
அணியெல்லாம் அணிந்திருக்கும் அவனழகைக் காண்பாயே!
துணிவுடனே கோவிந்தா! சொன்னாலே நகர்ந்திடுவார்;
மணியோசை எதிரோசை மங்கலமாய் நனிகேட்பாய்!

உள்ளேநீ செலும்போதில் உடம்பெல்லாம் புல்லரிக்கும்;
தள்ளிவர நகர்ந்திடுவாய்! தகதகவென் றேஒளிரக்
கொள்ளைகொளும் பேரழகன் கோவிந்தன் நின்றிடுவான்;
துள்ளியெழும் காதலினால் துதிசெய்வாய்! நன்நெஞ்சே!

கூறினுன். அதற்கு அந்த மனிதர் 'நீ இந்த வழியாகப் போகவேண்டாம். வேறு வழியாகப் போய்விடு' என்ருன் அதற்கு நம்பாடுவான், 'எனக்கு உயிரைக்காட்டிலும் ஸத்தியமே பெரியது. ஆகையால் என்னைத் தடுக்க வேண்டாம்' என்றுசொல்லிவிட்டு வேகமாக பிரம்மராக்ஷஸன் இருக்குமிடம் சென்ருன். நடுவழியில் வந்த மனிதன் வேறுயாருமல்ல. சாக்ஷாத் ஸர்வேசுவரனே. இவனுக்கு ஸகலவித மங்களங்களையும் அருளவந்தார் போலும்!

பிரம்மராக்ஷஸனைப் பார்த்து நம்பாடுவான் ''உன்னிடம் செய்து கொடுத்த ஸத்தியத்தின்படி இதோ வந்துள்ளேன். என்னை உனக்கு உணவாகஆக்கிக்கொள்' என்ருன். அதற்கு பிரம்மராக்ஷஸன் 'நான் உன்னை உணவாக்கிக் கொள்ளப் போவதில்லை. இன்று நீ பகவானைப்பாடி, தரிசித்துப் பெற்ற புண்ணிய பலனை எனக்குகொடு' என்றன். அதற்கு இவன் 'நான் ஸத்தியம் தப்பாதவன். ஆகவே நீ கேட்டபடி என்னை ஆகாரமாக ஏற்றுக்கொள்ளவேண்டுமே தவிர, என்னுடைய புண்ணிய பலனை கேட்கலாகாது' என்ருன். அதற்கு பிரம்மராக்ஷஸன் 'நீ பாடிய பாட்டில் பாதி பலத்தை யாவது அல்லது ஒரு ஜாமத்தின் பலத்தையாவது தரவேண்டும்' என்று கேட்டான். இவ்வாறெல்லாம் கேட்கும் பிரம்மராக்ஷஸனைப் பார்த்து நம்பாடுவான் 'நீ எப்படி பிரம்மராக்ஷஸனுக ஆனுய்?' என்று கேட்டான். அதற்கு அது தனது பூர்வ ஜென்ம விருத்தாந்தத்தைகூறியது. 'நான்முன்ஜென்மத்தில் ஸோமஸர்மா என்கிற பிராம்மணனுய்ப் பிறந்து அர்த்த லோப மோஹத்தினுல் பணம் சேர்க்கவேண்டி பேராசையால் யாகம் செய்தேன். அதில் மந்திர லோபத்தினுல் (மந்திரத்தை உச்சரிக்கும் போது நேர்ந்த தவருல்) எனக்கு சூலதோஷம் உண்டாயிற்று. யாகம் ஆரம்பித்த ஐந்தாவது நாள் யாகம் முடிவு பெருமலேயே நான் மரணமடைந்தேன். அந்த தோஷத்தினுல் இந்தஜென்மம் எனக்கு ஏற்பட்டது' என்ருன். இதைக்கேட்ட நம்பாடுவான் 'இன்று நான் பாடிய பாட்டில் ஒரு பகுதி ''கைசிக'' மென்னும் பண். அதன் பலத்தை உனக்கு அளித்தேன்' என்ருன். பிறகு பிரம்மராக்ஷஸன் நம்பாடுவானிடம் வரம் பெற்றவனுய், மறுபிறவி எடுத்து மோக்ஷம் அடைந்தான். இதே போன்று நம்பாடுவானும் ஸ்ரீவைகுண்டத்தில் நித்யஸூரியாக வந்து விட்டதாக வராஹப் பெருமாள் பூமிப் பிராட்டியைப்பார்த்துச் சொன்னதாக புராணம் கூறுகிறது.

## கைசிக புராண படனம்

கைசிக புராண படன உத்ஸவம் பிரதி வருஷம் கார்த்திகை மாதம் சுக்லபக்ஷ த்வாதசியில் திருமலையில் திருவேங்கடமுடையான் ஸந்நிதியில் சிறப்பாக நடைபெறுகிறது. இதனையே 'கைசிக துவாதசி ஆஸ்தானம்' என்றும் பெரியோர் கூறுவர்.

திருமலையில் மூலவர் எழுந்தருளியுள்ள கர்ப்பக்கிருஹத்தில் ஸ்ரீநிவாஸனுக ஐந்து மூர்த்திகள் உள்ளனர். 'பஞ்ச பேதம்' என்றும் இதைச் சான்ரேர் குறிப்பிடுவர். ஒன்று மூலஸ்தானம்; இரண்டாமவர் போகமூர்த்தி; மூன்ருமவர் உத்ஸவ மூர்த்தி (ஸகல வித உத்ஸவங்களையும் கண்டருளப் பண்ணிக் கொள்பவர்); நான்காமவர் 'கொலுவு' ஸ்ரீநிவாஸன். இவருக்கு சூர்யோதயம் ஆகும்முன்பு 'கொலுவு' நடந்தால், தங்க வாசலுக்குள் தான் நடக்கும். அதாவது பஞ்சாங்க ஸ்ரவணம். சூர்யோதயம் ஆன பிறகு கொலுவு நடந்தால் தங்கவாசலுக்கு (பங்காரு வாசலுக்கு) வெளியில் நடக்கும். இவருக்கு மாருக ஐந்தாமவரான உக்கிர ஸ்ரீநிவாஸனுக்கு சூரியனின் ஒளி அவர் மேல் படக்கூடாது. ஆண்டுக்கு ஒரு முறை திருவீதி உத்ஸவம் இவருக்கு நடக்கும். இந்த திருவீதி உத்ஸவமும் சூர்யோதயத்திற்கு முன்பே நடக்கும். அதாவது கார்த்திகை மாதம் சுக்லபக்ஷ த்வாதசியன்று இவருக்கு திருவீதிப் புறப்பாடு உத்ஸவம் நடக்கும். உத்ஸவம் முடிந்த பிறகு ஸந்நிதி முக மண்டபத்தில் தங்கத்தாலான ஸர்வபூபால வாஹனத்தில் விசேஷ அலங்காரத்துடன் உக்கிர ஸ்ரீநிவாஸனை எழுந்தருளப்பண்ணி விசேஷ திருப்பணியாரங்களை நைவேத்யம் செய்வார்கள். பிறகு விஜயநகர சாம்ராஜ்ய ஆஸ்தான குரு ஏடூர் எம்படிதிருமலை 'லக்ஷ்மீகுமாரர்' 'கோடி கன்னிகாதான'தாத்தாசார்யர்திருவம்சத்தவரானதாத்தாச்சார்யர் ஸ்வாமி! உக்கிர ஸ்ரீநிவாஸமூர்த்தியின் எதிரில் அமர்ந்து கைசிக புராணத்தை வாசிப்பார். இந்த உத்ஸவத்தை பக்தர்கள் அவசியம் சேவிக்கவேண்டும். ★

## ஆர்ஜித தெப்போற்சவம்

திருமலையில் வருடத்தில் மூன்று நாட்கள் நடத்தப்பட்டு வரும் தெப்போற்சவம், இப்பொழுது யாத்திரிகர்களின் விருப்பத்தை நிறைவேற்றும் வகையில், ஒவ்வொருவாரமும், செவ்வாய்க் கிழமைகளில் நடத்தப்பட்டு வருகின்றது. அன்று இறைவன் திருப்பள்ளி ஓடையில் (தெப்பத்தில்) எழுந்தருளி பக்தர்களுக்கு அருள் புரிவார். ரூ. 1500/- செலுத்தி பக்தர்களும் இவ்வார்ஜித தெப்போற்சவத்தில் பங்கேற்கலாம். பங்கேற்கும் கிருஹஸ்தர்க்கு, ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் திருவுருவம் பதித்த 5 கிராம் எடையுள்ள தங்கப்பதக்கம் ஒன்றும், வஸ்த்ர பஹுமானமும் மேலும் நைவேத்தியமும் வழங்கப்படும். அதுமட்டுமன்றி, கிருஹஸ்தரைச் சார்ந்த 10 நபர்கள், இறைவனின் தரிசனத்திற்காக அனுமதிக்கப்படுவர்.

# சித்த மருத்துவ முறை

திரு. R. பத்மநாபன், B.A., B.T.,
வேலூர்-12.

ஒருவருக்கு நோயுண்டானால் அதைப் போக்க அந்நாட்டில் விளைந்த பொருள்களைக் கொண்டுதான் மருந்து செய்வது பழக்கம். நோயாளியின் பழக்க வழக்கத்திற்குத் தக்கவாறு மருந்தும், பத்திய முறைகளும் ஒழுங்காக அமைய வேண்டியிருக்கிறது.

நமது நாட்டின் தட்ப வெட்ப நிலைகளை ஒட்டியே மருத்துவ நூல்களும் எழுதப்பட்டிருக்கின்றன. மக்களுக்கு அவ்வந்நாட்டு மருத்துவர்களால் கண்டுபிடிக்கப்பட்ட மருத்துவ முறைகளே நனி சிறந்தனவாகும் என்பது நன்கு தெளிவாகும்.

'சித்த வைத்தியம்' என்பதற்குத் தமிழ் மருத்துவ முறை என்றும் கூறுவர். போகர், கொங்கணர், தேரையர், கோரக்கர் முதலிய தமிழ் நாட்டுச் சித்தர்கள் இயற்றிய முறையாதலால் இஃது இப்பெயர் பெற்றது.

பழங்காலந்தொட்டு நம் முன்னோர் மருந்து செய்தல், உதிரங்களைதல், அறுத்தல், சுடுதல் ஆகிய நான்கு முறைகளையும் அறிந்திருந்தார்கள். அம்மருந்துகள் பெரும்பாலும் பொன் முதலிய உலோகங்களிலிருந்தும் தாவர, மூலிகை வர்க்கங்களிலிருந்தும் செய்யப்பட்டன. உயிர்களைக் கொன்று அவற்றின் உதிரம் முதலியவற்றைக் கூட்டியும் மருந்துகள் செய்வது வழக்கம். உதாரணம், முயல் எண்ணெய், மயில் எண்ணெய் முதலியவை.

## தமிழ் மருத்துவ முறை :

முற்காலத்தில் தமிழ் மருத்துவ நூல்கள் பல இருந்தன. அவையாவும் செய்யுள் வடிவத்தில் இயற்றப்பட்டவை. ஆனால் அவற்றில் எல்லா நூல்களும் இப்பொழுது நமக்குக் கிடைக்கவில்லை. தற்சமயம் கிடைக்கும் சில நூல்களை வைத்துத்தான் வைத்திய முறைகள் நடைபெறுகின்றன. மருத்துவர் தாமோதரனார் என்பவர் கடைச்சங்கப் புலவர்; அவர் ஓர் மருத்துவப் புலவர்; வேறு சில புலவர்கள் மருந்துகளின் பெயரை அமைத்துநீதிநூல்கள் இயற்றியிருக்கிறார்கள். உதாரணமாக, திரிகடுகம், சிறுபஞ்சமூலம், ஏலாதி என்பன அவை. திருவள்ளுவரும் திருக்குறளில் 'மருந்து' என்ற ஓர் அதிகாரத்தையும் (95-அம் அதிகாரம்) அழகாக அமைத்திருப்பதைக் காணலாம்.



பதார்த்த குண சிந்தாமணி என்ற நூல் உணவுக்கும் மருந்துக்கும் பயன்படும் பொருள்களின் குணாகுணங்களை எடுத்துக்காட்டுகிறது. உதாரணமாக இஞ்சி, சுக்கு, தேன் உணவுக்கும் மருந்துக்கும் மிகவும் பயன்படுகின்றன.

இவற்றைத் தவிர மருத்துவ உண்மைகள் பற்பல உவமைகளாகப் பல தமிழ் நூல்களில் படிக்கலாம். ஆங்கிலேயர் ஆட்சியில் கேட்பார் அற்றுக் கிடந்த சித்த மருத்துவம் விடுதலைக்குப் பின் புத்துயிர் பெற்று பீடு நடை போடுவதைக் காணலாம். ஆங்காங்கு சித்த மருத்துவ மனைகளும், கல்லூரிகளும் நிறுவப்பட்டு வருவது மிகவும் பாராட்டத்தக்கச் செயல்களாகும். மேலும் மேனாட்டு முறை தொடர்பினால் சூரணங்கள் குழாய் மருந்துகளாகவும் (Capsule) கொடுக்கப்பட்டு வருகின்றன.

## ஆயுர்வேதம், யூநானி :

சித்த மருத்துவ முறை நம் நாட்டில் பரவி வருங்காலத்தில் ஆயுர்வேதம் என்ற மருத்துவ முறையும் வடநாட்டிலிருந்து வரலாயிற்று. தன்வந்தரி என்றவர் அதை மக்களுக்குக் கற்பித்தார். எனவே ஆயுர்வேதமும், சித்த மருத்துவமும் பிற்காலத்தில் பிரிவின்றிக் கலப்புற்றுப் பற்பல திருத்தங்களைக் கொண்டன. இந்த இரண்டும் நமது நாட்டில் வழங்கிவருகையில் இஸ்லாமியர் தம்முடைய யூநானி மருத்துவ முறையை வழக்கத்தில் கொண்டு வந்தனர். அவர்களுடைய ஆட்சியில் யூநானி முறை மிகச் சீக்கிரமாக பரவலாயிற்று.

நமது நாட்டு வைத்திய முறைகளை நல்ல நிலைக்குக் கொண்டுவர, அரசும், பொது மக்களும் மேலும் முயன்று பழைய முறையினைக் கையாள வேண்டும்.

எல்லாவற்றிற்கும் மேலாக, அவற்றில் மக்கள் மிக்க நம்பிக்கை வைக்க முற்படவேண்டும்.

''நோய் நாடி நோய் முதல் நாடி
அது தணிக்கும்
வாய் நாடி வாய்ப்பச் செயல்''

*(குறள்—948)*



தொடர் கட்டுரை

# கீதை காட்டும் நல்வழி



## அத்தியாம் – 9

### ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்

பகுதி — 5

பாபம் செய்தவர்கள் நரகத்தை அடைவர் என்றும் புண்ணியம் செய்தவர் சொர்க்கத்தை அடைவர் என்றும் பொதுவாக நாம் கூறுகிறோம். சொர்க்கம் நரகம் என்று சொல்லும் போது நமது மனத்தில் எத்தகைய எண்ணங்கள் எழுகின்றன? நரகம் என்பது துன்பங்களும் தொல்லைகளும் நிறைந்த இடம்; பாம்பு, தேள், புலி, சிங்கம் போன்ற கொடிய ஜந்துக்கள் நிறைந்த இடம், கொதிக்கும் எண்ணெய்க் கொப்பரைக்குள், எரியும் தீக்குள் நாம் வாட்டி வதைக்கப்படுவோம்...இப்படி பலவிதமாக நாம் நரகத்தைப்பற்றிக் கற்பனை செய்கிறோம்.

சொர்க்கம் என்றால் அங்கே எல்லா விதமான ஐசுவரியங்களும் இருக்கும், காமதேனு, கற்பக விருக்ஷம் போன்றவற்றின் உதவியுடன் விரும்பியதையெல்லாம் நினைத்த மாத்திரத்தில் பெற முடியும், மூப்பு நரை திரை ஒன்றும் அங்கே நம்மை வாட்டாது, ரம்பை, ஊர்வசி போன்ற அழகு மிக்க நடன மாதர் ஒரு புறம் நடனமாடிக் கொண்டிருப்பர், கந்தவர்கள் எப்பொழுதும் இனிய பாடலைப் பாடிக் கொண்டிருப்பர், எங்கு நோக்கினும் ரத்தினம், மரகதம், கோமேதகம், புஷ்பராகம், பவழம் போன்றவை கொட்டிக் கிடக்கும், ஒரே ஆனந்தமே ஆனந்தம் என்றெல்லாம் நமது மனம் சொர்க்கத்தைப் பற்றிய சிந்தனையில் கற்பனைக் குதிரையின் மீதமர்ந்து காற்றினும் வேகமாக ஓடுகிறது.

இவ்வுலக வாழ்விற்குப் பின்னர் நாம் செய்த புண்ணிய பாபங்களுக்கேற்ப நமக்கு சொர்க்கமோ அல்லது நரகமோ கிட்டும் என்று நாம் பொதுவாக நினைக்கிறோம். நரகத்திற்குப் போக ஒருவரும் விரும்புவதில்லை. சொர்க்கத்திற்குப் போகத் தான் அனைவருக்கும் ஆசை. நாம் இவ்வளவு உயர்வாக நினைக்கும் சொர்க்கம் உண்மையிலேயே அவ்வளவு மகத்வம் வாய்ந்ததா? பகவான் பதில் தருகிறார்:

தே தம் புக்த்வா ஸ்வர்க லோகம் விசாலம்
க்ஷீணே புண்யே மர்த்ய லோகம் விசந்தி |
ஏவம் த்ரயிதர்ம மனுப்ரபன்னா
கதா கதம் காம காமா லபந்தே ‖ 21 ‖

"அவர்கள் அந்த அகன்ற விண்ணுலகை அனுபவித்து புண்ணியம் தேய்ந்த பின்பு மண்ணுலகில் புகுகிறார்கள். இங்ஙனம் மூன்று வேத மார்க்கங்களைப் பின்பற்றும் ஆசை வயப்பட்டவர்கள் பிறப்பு இறப்பை அடைகின்றனர்".

வேதம் சொல்லிய கர்ம காண்டத்தில் நம்பிக்கைக் கொண்டு யாக யக்ஞாதிகள் செய்தவர்கள் பொன்னையும் பொருளையும் விரும்பியவர்களாக சொர்க்க பதவியை அடைகின்றனர். அந்த சொர்க்கத்தில் அவர்கள் நிரந்தரமாக இருக்க முடியாது. ஏனெனில் அவரவர்கள் செய்த புண்ணியத்தின் அளவுக்கேற்ப அவர்களது சொர்க்க வாசம் அமைகிறது. புண்ணியம் எல்லாம் தீர்ந்து போனவுடன் அவர்கள் மீண்டும் பூலோகத்தை வந்தடைகின்றனர்.

பாங்கு ஒன்றில் நாம் சிறிது சிறிதாகப் பணம் போட்டுச் சேர்த்து வைக்கிறோம். சுமார் ரூ. 10,000 சேர்கிறது என்று வைத்துக் கொள்வோம். பிறகு ஒரு சமயம் சேர்த்து வைத்த பணத்திலிருந்து சிறிது சிறிதாக எடுத்து அனுபவிக்கிறோம். அவ்வாறு எவ்வளவு காலம் நாம் அனுபவிக்க முடியும்? நாம் எவ்வளவு பணம் சேர்த்தோமோ, பாங்கில் நமது கணக்கில் எவ்வளவு தொகை இருக்கிறதோ அதுவரைதான் நாம் அனுபவிக்க முடியும். அதன்பின்னர் மீண்டும் பழைய கதைதான்.

சொர்க்க இன்பங்களும் இதைப் போலத்தான். நமது பாப புண்ணியக்

கணக்கில் புண்ணியம் தீர்ந்துபோகின்ற பொழுது மண்ணுலகில் மீண்டும் நாம் பிறவி எடுக்க நேரிடுகிறது. பிறவி எடுத்தால் மீண்டும் இறந்தாக வேண்டும். பிறப் பிறப்புச் சக்கரம் பொல்லாதது. எனவேதான் இதில் வெறுப்புக் கொண்ட ஒரு பக்தர், 'ஆதலால் இப்பிறவி வேண்டேன் அரங்க மா நகருளானே', என்று பகவானிடம் விண்ணப்பம் செய்கிறார்,

எனவே சிறிது காலம் இன்பத்தை அனுபவித்துவிட்டு மீண்டும் பிறவித் தொல்லைக்குள்ளாகும் நிலைமை போற்றற்குரியதாகுமா? ஆகாது. எனவே சொர்க்கத்திற்கு வழி கோலும் புண்யத்தை ஞானிகள் புண்ணியமாகக் கருதுவதில்லை. அதையும் அவர்கள் பாபமாகவேதான் கருதுகின்றனர். ஏனெனில் மீண்டும் பிறவிக்கு வகை செய்யும் ஒன்று எப்படிப் போற்றற்குரியதாக அமைய முடியும்?

வேதங்களை நன்கு கற்றறிந்தவர்கள் என்றாலும் போகத்தில், இன்பத்தில் நாட்டம் கொண்டு யாக யக்ஞங்கள் செய்பவர்கள் கீழ்த்தரமானவர்களே என்பது பகவானின் கருத்து. பிறப் பிறப்பற்ற பெருநிலையை அளிக்கவல்ல பகவான் ஒரு புறம் நம்மை வாரியணைக்கக் காத்துக் கொண்டிருக்கையில், நாமோ, அவரை ஏறெடுத்தும் பார்க்காது கண்ணிமைக்கும் நேரத்தில் தோன்றி மறையும் தாற்காலிக இன்பத்தைத் தரவல்ல மயக்கும் போகப் பொருள்களில் மனத்தைப் பறிகொடுத்தவர்களாக இருக்கிறோம். நமது நிலையை என்னென்பது?

பொருள் உள்ள அளவு மண்ணுலகில் ஒருவனுக்கு மதிப்பு இருப்பதுபோன்று புண்ணியம் உள்ள அளவு விண்ணுலகில் மதிப்பு உண்டு. அது தீர்ந்ததும் அவர்கள் மண்ணுலகிற்கு மீண்டும் வந்து புதிய புண்ணியத்தைத் தேடிச் சம்பாதிக்க கர்மபூமியை அடைந்தாக வேண்டும். அவர்களது இந்த நிலை, செக்கு மாட்டின் கதியைப் போலப் பரிதாபத்திற்குரியதாகும்.

ஆசையுள்ளவர்களின் நிலை இவ்வாறிருக்க ஆசையை வென்று அனன்ய பக்தி கொண்டிருப்பவர்களின் நிலை போற்றுதற்குரியதாகும். அது என்ன?

அனன்யாஸ் சிந்தயந்தோ மாம்
யே ஜநா: பர்யுபாஸதே |
தேஷாம் நித்யாபி யுக்தானாம்
யோக க்ஷேமம் வஹாம்யஹம் ||22||

'அன்னியரல்லாதவர்களாக என்னையே நினைந்து யாண்டும் என்னையே வழிபடும் நித்திய யோகிகளுடைய யோக க்ஷேமத்தை நான் வழங்குகிறேன்'.

இந்த சுலோகம் பகவத்கீதையில் மிக முக்கியமான சுலோகமாகும். கீதையின் சாரமே இந்த சுலோகத்தில் அடங்கி விடுகிறது என்று சொன்னாலும் அது மிகையாகாது.

இறைவனது அருள் யாருக்குக் கிட்டும், இறைவனது அருளுக்குப் பாத்திரமானவர் யார் என்னும் கேள்விக்கு ஈண்டு பதில் கிட்டுகிறது.

'அனன்யம்' என்றால் பரமாத்மாவைத் தவிர அதாவது இறைவனைத் தவிர தங்கள் மனத்தினில் வேறு எதையும் எண்ணாதிருத்தல் என்றுகிறது. அவ்வாறு செய்யும் பக்திக்கு அனன்ய பக்தி என்று பெயர். எதைச் செய்தாலும். சொன்னாலும், சிந்தித்தாலும் அனைத்தும் பகவானுக்கும் அர்ப்பணம் என்ற நிலை வரும்பொழுதுதான் அவர்களுக்குப் பகவானின் அருள் பரிபூரணமாகக் கிட்டுகிறது.

வீட்டில் அடுக்களையில் தாய் சமையல் காரியத்தில் ஈடுபட்டிருக்கிறாள். கூடத்தில் குழந்தை விளையாட்டுச் சாமான்களுடன் விளையாடிக் கொண்டிருக்கிறது. இடையிடையே அதற்குத் தாயின் நினைவு வருகிறது. 'அம்மா!' என்று அது அழைக்கிறது. ஆனால் மீண்டும் அது விளையாட்டில் ஈடுபடுகிறது. அந்த நிலையில் 'அம்மா'! என்ற அதன் அழைப்பிற்கு அதன் தாய் செவி சாய்ப்பதில்லை. பிறகு




# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில்

மற்றும்

# ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர சுவாமி கோயில்

## தி. தி. தேவஸ்தானம் ஆந்திர ஆஷ்ரமம், ரிஷிகேஷ் உ.பி.

### ஆர்ஜித அட்டவணை

| பொது | | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில் | ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர சுவாமி கோயில் |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| அர்ச்சனை | டிக்கெட் ஒன்று | 2-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| சகஸ்ரநாம அர்ச்சனை | ,, | 5-50 | 5-00 |
| தோமாலந்தார தரிசனம் | | 5-00 | — |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) | டிக்கெட் ஒன்று | 0-25 | 0-25 |

| | | ஸ்ரீ ராஜலக்ஷ்மி அம்மையார் கோயில் | ஸ்ரீ பார்வதி அம்மையார் கோயில் |
|---|---|---|---|
| அர்ச்சனை | ,, | 1-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) | டிக்கெட் ஒன்று | 0-25. | 0-25 |

| நைவேத்தியங்கள் | | ரூ. |
|---|---|---|
| தத்யோதனம் | முழுத் தளிகை | 45-00 |
| புளியோதரை | ,, | 45-00 |
| பொங்கல் | ,, | 60-00 |
| இனிப்புப் பொங்கல் | ,, | 65-00 |

குறிப்பு : ஒவ்வொரு நைவேத்தியத்திற்கும், ஆர்ஜித கட்டணத்தைத் தவிர மேற்கொண்டு சிங்கமொழுவுக்காக ரூ. 3/- செலுத்த வேண்டும். மேலும் அரைக்கட்டண விகிதத்தில், இறைவனுக்கு அரைத்தளிகை நைவேத்தியமும் பக்தர்கள் செய்விக்கலாம்.

குழந்தைக்குப் பசி எடுக்கிறது. விளையாட்டுச் சாமான்களில் அதற்கு வெறுப்பேற்படுகிறது. உடனே அது 'அம்மா, அம்மா' வென்று 'ஓ' வென்று அலற ஆரம்பிக்கிறது. இது காறும் அதன் அழைப்பிற்குச் செவி சாய்க்காத அந்தத் தாய் இப்பொழுது ஓடோடியும் வந்து அதைத் தன் இடுப்பில் எடுத்து வைத்துக் கொள்ளுகிறாள். தன் முயற்சியில் வெற்றி கண்ட அந்தக் குழந்தையும் தன் பொக்கை வாயைக் காட்டிச் சிரிக்கிறது.

இதைப் போலத் தான் உலகப் பொருள்களில் பெரும்பகுதியும், அவ்வப் பொழுது கடவுளிடத்தில் சிறிது நாட்டமும் நமக்கு இருக்கும் வரை நமக்கு அவனருள் பூரணமாகக் கிட்டுவதில்லை. அவ்விதம் அவன் அருள் கிட்டாததற்குக் காரணம் நாமே என்பதை அறியாத நாம் இறைவனுக்குக் கண்ணில்லை யென்றும், அவன் பாரபட்சம் மிகுந்தவன் என்றும் சொல்லி அவனைத் தூற்றத் தலைப்படுகிறோம். ஆனால் பின்னர் உலகப் பொருள்களில் நாட்டம் அறவே அற்று இறைவன் ஒருவனே கதி என்று சிக்கென அவனைப் பிடித்துக் கொள்ளுகையில் அவனருள் நம்மீது சுரக்கிறது.

'**पर्युपासते**' என்ற வார்த்தை எங்கும் இறைவனை உபாசித்தல் எனப் பொருள்படுகிறது. ஆலயத்தில் மட்டும்தான் கடவுள் இருக்கிறார் என்பது அறியாமை. எங்கும் அவர் இலங்குகிறார் என்பதுவே மெய் அறிவு. 'See God in every thing' என்பதுவே ஸர்வ வேத சாரம். இதைத்தான் ஸ்ரீ சுவாமி சிவானந்தர் அடிக்கடி வலியுறுத்தியது.

அத்தகைய பக்தர்கள் 'நித்திய யோகிகள்' ஆகின்றார்கள். ஏதோ காலையில் எழுந்தவுடன் ஸ்நானத்திற்குப் பின்னர் பத்து அல்லது பதினைந்து நிமிடங்கள் பகவத் தியானம் பண்ணுவதுடன் பெரும்பாலோரது பக்தி முடிவடைந்துவிடுகிறது. அதன் பின்னர் பண்ணுவதில் எத்தனையோ

(28-ம் பக்கம் பார்க்க)

# அனுமன் கதை



## 15. நாணி நின்றான்

" என்று கூறலு மெழுந்திரு
நிலனுற விறைஞ்சி
ஒன்றும் பேசலன் நாணினன்
வணங்கிய வுரவோன்
நின்ற வானரத் தலைவரு மரசுமந்
நெடியோன்
வென்றி கேட்டலும் வீடுபெற்
றனரென வியந்தார். "

73. இலங்கைக் கேள்விப் படலம், சுந்தர காண்டம்.

சீதை இலங்கையில் உள்ள செய்தியைக் கேட்டறிந்த இராமன் அனுமனைப் பலபடப் புகழ்ந்து கூறினான். அனுமன் வழிகாட்ட, வானர சேனைகளுடன் சென்று இராமன் தென் திசைக் கடலை அடைந்தான்.

அனுமனால் எரியூட்டப்பட்ட இலங்கை அழிந்து காணப்பட்டது. தெய்வத்தச்சனை அழைத்து இலங்கையைப் புதுப்பிக்குமாறு இராவணன் ஆணையிட்டான். பிரமதேவனுடன் வந்த தெய்வத் தச்சன் இலங்கையை முன்னிலும் பன்மடங்கு அழகு தோன்றப் புதுப்பித்தான். மந்திராலோசனை மண்டபத்தில் தன் அமைச்சர்களுடன் இராவணன் ஆலோசனை செய்து கொண்டிருந்தான். அப்போது, இராவணனது தம்பியான கும்பகருணன் எழுந்தான். இலங்கையை அழிவுறச் செய்த அனுமனுடைய நாயகனை இராமனோடு போர் புரிதலே உடனடியாகச் செய்யத்தக்கது என்று எடுத்துக் கூறினான். அங்கிருந்த இந்திரசித்து தான் ஒருவன் மட்டுமே சென்று பகைவர்களை அழிக்க முடியுமென்று வீரம் பேசினான். இவர்களை அடக்கிவிட்டு, இராவணனின் மற்றொரு தம்பியான விபீடணன் எழுந்து பேசத் தொடங்கினான்.

சீதையைச் சிறையிலிருந்து விடுவிப்பதே அரக்கர் குலம் தப்பிப் பிழைத்தற்குரிய அற்புதமான வழி என்று விபீடணன் தெளிவுபடுத்தினான். ஆனால், விபீடணனின் இந்த யோசனை இராவணனது செவிகளில் ஏறவில்லை. 'ஞானமும் கல்வியும் நயந்த நூல்களும் ஈனருக்குரைத்திடில் இடராகும்' என்பது உண்மை வாக்கன்றோ !

'சீதையைச் சிறையிலிருந்து விடுக!' என்று விபீடணன் கூறிய அளவில் இராவணனுக்குப் பெருங் கோபம் பொங்கியெழுந்தது. 'என் முன் நில்லாது உடனே அப்பால் செல்க!' என்று கூறி இராவணன் விபீடணனைக் கடிந்து கொண்டான். தன் நல்லுரையைக் கேளாத தமையனை விட்டுப் பிரிதலே தக்கதென்று கருதிய விபீடணன் இராவணனை விட்டுப் பிரிந்தான். கடல் கடந்து சென்று வானரசேனைகள் தங்கியிருக்கும் இடத்தையடைந்தான். இராமபிரான் இருக்கும் திசை நோக்கிக் 'கொற்றவ சரணம்!' என்று கூறிக் கொண்டே சென்றான்.

விபீடணனைக் கண்ட வானர வீரர்கள் அவனைக் கொல்லுதற்கு முயன்றனர். இதனைக் கண்ட அனுமன், அங்கிருந்த காவலாளரும் அசுவினி தேவர்களின் புதல்வர்களுமான மயிந்த துவிவிதரை நோக்கி, 'வந்தவர்களை நம்மவர் ஒன்றும் செய்யா வண்ணம் அவர்களின் நிலையினைக் கண்டு வருக!' எனக் கட்டளையிட்டான்.

விபீடணனும், அவனது அன்புக்குரியவர்களும் இராமபிரானையே சரணமாக அடைய வந்திருக்கும் செய்தியினை மயிந்ததுவிவிதர் அறிந்துவந்து விளக்கமாக இராமபிரானிடம் கூறினர். இராமபிரான் சுக்ரீவன் முதலான தோழர்களுடன், " விபீடணன் முதலானோரைச் சேர்த்துக் கொள்வதா ? விட்டு விடுவதா?" என்று தனித்தனியாக ஒவ்வொருவரின் கருத்தையும் கேட்டறிந்தான்.

சுக்ரீவன், சாம்பவான், நீலன் முதலானோர் பலரும் விபீடணனை ஏற்றுக் கொள்ளலாகாது என்றே ஒருமுகமாகக் கூறி நின்றனர். இறுதியாக அனுமனது கருத்தையறிய விரும்பி, "கேள்வியறிவு நிரம்பப் பெற்றவனே! உன் கருத்தினைக் கூறுக!" என்று இராமபிரான் அனுமனைக் கேட்டுக் கொண்டான்.

நுட்பமான கேள்வியறிவினையுடைய அனுமன் வாய் பொத்தி வணக்கத்துடன் இராமபிரானுக்குப் பதில் கூறத் தொடங்கினான்.

"ஐயனே! உம்போன்ற அறிவாளிகள் என்போன்ற அற்பமான அறிவினையுடையவர்களின் ஆலோசனையைக்




# ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயில், திருப்பதி

## தினசரி நிகழ்ச்சி நிரல்

| | | | | |
|---|---|---|---|---|
| சுப்ரபாதம் | 5-00 A.M. | முதல் | 5-30 A.M. | வரை |
| விஸ்வரூப சர்வ தரிசனம் | 5-30 A.M. | ,, | 7-00 A.M. | ,, |
| சுத்தி | 7-00 A.M. | ,, | 7-30 A.M. | ,, |
| தோமால சேவை | 7-30 A.M. | ,, | 8-00 A.M. | ,, |
| அர்ச்சனை (ஆர்ஜிதம்) | 8-00 A.M. | ,, | 8-30 A.M. | ,, |
| முதல்மணி, சாத்துமுறை | 8-30 A.M. | ,, | 9-00 A.M. | ,, |
| சர்வ தரிசனம் | 9-00 A.M. | ,, | 12-30 P.M. | ,, |
| இரண்டாவது மணி | 12-30 P.M. | ,, | 1-00 P.M. | ,, |
| சர்வ தரிசனம் | 1-00 P.M. | ,, | 6-00 P.M. | ,, |
| தோமாலசேவை, இரவுமணி | 6-00 P.M. | ,, | 7-00 P.M. | ,, |
| சர்வ தரிசனம் | 7-00 P.M. | ,, | 8-45 P.M. | ,, |
| ஏகாந்தசேவை | 9-00 P.M. | | | |

ஒவ்வொரு பௌர்ணமி நாளன்றும் பூலங்கி சேவை நடைபெறும்.

### கட்டணம் செலுத்தி நடத்தப்படும் சேவைகள்

| | | |
|---|---|---|
| தோமால சேவை (நபர் ஒருவருக்கு) | ரூ. | 4—00 |
| அர்ச்சனை | ரூ. | 3—00 |
| ஹாரத்தி | ரூ. | 1—00 |

### ஸ்ரீ கோவிந்தராஜர் கோயில் வாகனங்கள்

| | | |
|---|---|---|
| கருட வாகனம் | ரூ. | 32—00 |
| சந்திரப்பிரபை வாகனம் | ரூ. | 32—00 |
| யானை வாகனம் | ரூ. | 32—00 |
| குதிரை வாகனம் | ரூ. | 32—00 |
| சிம்ஹ வாகனம் | ரூ. | 32—00 |
| ஹனுமத வாகனம் | ரூ. | 32—00 |
| சிறிய சேஷ வாகனம் | ரூ. | 32—00 |
| பெரிய சேஷ வாகனம் | ரூ. | 62—00 |
| சர்வ பூபால வாகனம் | ரூ. | 62—00 |
| சூர்யப் பிரபை வாகனம் | ரூ. | 62—00 |

கேட்க வேண்டிய அவசியமில்லை. என்ருலும், எம்போன்ருரையும் கலந்தாலோசிப்பதன் மூலம் தாங்கள் மேலும் ஒரு படி உயர்ந்து நிற்கின்றீர்கள்! அனைத்தையும் நன்ருக அறிந்துணரும் ஆற்றல் தங்களிடமே உள்ளது. மேலும், நம் சேனையிலுள்ள அறிஞர்கள் பலரும் தங்கள் தங்கள் கருத்துக்களைத் தெளிவாக ஆராய்ந்து உம்மிடம் தெரிவித்து விட்டனர். இந்நிலையில் நான் கூறவேண்டுவது யாது உள்ளது! தூய அறிவினையுடைய சுக்ரீவன் முதலானேர் ஆய்ந்து கூறிய கருத்துக்கள் நிறைந்த அறிவு நலம் சான்றவையே! என்ருலும், ஒன்று சொல்ல விரும்புகிறேன். இதுவரை கூறியவர்கள் நினைப்பதுபோல, விபீடணனைக் கொடியவனுக என் மனம் நினைக்கவில்லை. அதற்கான காரணங்களை மட்டும் சொல்ல விரும்புகிறேன்.

'அகத்தினழகு முகத்தில் தெரியும்' என்பார்கள். ஒருவரிடம் வஞ்சனைக் குணம் இருந்தால், அதனை அவர் முகமே காட்டிவிடுமல்லவா? பகைவர்களாக உள்ளவர்கள் நம்மிடம் 'அடைக்கலம்' என்று கூறிவந்து நம்மோடு சேர்வார்களா ?

இனிமேல் இராவணனுக்கு ஆபத்து வரும் என்று அறிந்திருந்தும், விபீடணன் தன் அண்ணனை விட்டு வந்திருக்கிருன். 'அல்லல் வரவிருக்கும் இச்சமயத்தில் அண்ணனை விட்டுப் பிரிந்து வந்துள்ள இவனை நம்பலாமா!' என்று நம்மவர்கள் ஐயம்கொள்வது இயல்பேயாகும். ஆனல், விபீடணன் வந்துள்ள நோக்கமே வேறு! வாலியாகிய அண்ணனல் சுக்ரீவனுகிய தம்பி அடைந்த துன்பத்தைத் தாங்கள் துடைத்ததுபோல, இராவணனுகிய அண்ணனல் தனக்கும் தன் குலத்துக்கும் நேரவிருக்கும் துன்பத்தைத் தாங்கள் போக்குவீர்கள் என்று நம்பியே விபீடணன் நம்மை வந்தடைந்திருக்கிருன்.

தம்பி பரதனுக்குத் தரணியைத் தந்து தாங்கள் கானகம் வந்துள்ளதால், தம்பியர் முறையாக உள்ள

அனைவரிடமும் தங்களுக்கு அருள் இருக்கும் என்று கருதித் தங்களைச் சார்ந்து வாழ அவன் எண்ணியிருக்கக் கூடும். மேலும், வாலியைக் கொன்ற உமது ஆற்றலைக் கேட்ட அவன் உம்மைப் பரம்பொருள் என்றே கருதி விட்டான். தன் தமையனை இராவணனுக்குப் பலகாலம் நல்லுபதேசம் செய்தும் பயனின்றிப் போகவே, உம்மை வந்து சார்தலே தக்கது என்று கருதித் தகுந்த சமயத்திலேயே நம்மை வந்து அடைந்திருக்கிறான். 'பாம்பின் கால் பாம்பறியும்!' என்பது போல அரக்கர் மாயத்தை அரக்கரே அறிதல் கூடும். இராவணனோடு நாம் போர் புரியும்போது, அரக்கர்கள் செய்யும் மாயத்தை அறிந்து சொல்வதற்கு நமக்கு ஆள் வேண்டுமல்லவா? அதற்கு இவன் பயன்படுவான். வலிமை மிகுந்த பகைவர்களைத்தான் நாம் சந்தேகிக்க வேண்டும். எளியவனை இவனைச் சந்தேகிப்பது சரியென்று எனக்குப் புலப்படவில்லை.

விபீடணன் நல்லெண்ணமே உடையவன் என்பதற்குச் சான்று ஒன்று பகர்கின்றேன். நான் சீதையைக் காண இலங்கை சென்றிருந்தபோது, என்னைக் கொல்லுமாறு இராவணன் தன் ஏவலர்களுக்குக் கட்டளையிட்டான்.

அப்போது விபீடணன் தன் அண்ணனை நோக்கி, "தூதரைக் கொல்லுதல் அறமன்று. இச்செயல் நமக்கு இழிவையும் பழியையும் தரும். மாதரையும், போரில் புறமுதுகு காட்டி ஓடுவோரையும் கொல்லுதல் எவ்வளவு தீமையை விளைவிக்குமோ, தூதரைக் கொல்லுதலும் அத்தகைய தீமையை விளைவிக்க வல்லது. எனவே, தூதாக வந்த இவ்வானரத்தைக் கொல்லாது செல்ல விடுதலே அறவழியாகும்!" என்று கூறி தடுத்து நிறுத்தினான்.

விபீடணன் மிகவும் நல்லவன் என்பதற்கு வேறு ஒரு சான்றும் உண்டு. இலங்கையில் உள்ள அவன் மாளிகையை நான் நேரில் பார்த்திருக்கிறேன். அது பிராமணருடைய வீட்டினைப் போல மிகவும் தூய்மையாகக் காணப்பட்டது. அரக்கர்கள் மிகவும் விரும்பியுண்ணும் கள்ளையும் ஊனையும் இவன் இல்லத்தில் நான் காணவில்லை.

இவனைப்போலவே, இவன் மகளும் மிகவும் நல்லவள். அசோகவனத்தில் பிராட்டியைக் காத்து நிற்கும் அரக்கியருள் இவன் மகளாகிய திரிசடை என்பாளும் ஒருத்தியாவாள். அரக்கியர் கொடுமைகளால் நலிவுற்றிருக்கும் பிராட்டியார்க்குத் திரிசடையே உற்றதுணையாக இருந்து உதவுவதை நான் நேரில் கண்டிருக்கிறேன். "இராவணனால் தனக்கு ஆபத்து நேருமோ!" என்று அஞ்சிய பிராட்டிக்குத் திரிசடையின் சொல் ஆறுதல் அளித்ததை நான் கேட்டேன். 'பிற மாதரை வலியக் கற்பழிக்க முயன்றால், இராவணன் தலை சுக்கு நூறாக வெடித்துப் போகும்!' என்ற பிரமனது சாபத்தைப் பிராட்டிக்குக் கூறித் தேறுதலும் ஆறுதலும் தருபவளாகத் திரிசடை விளங்கியதைக் கண்டு நான் பெரிதும் மகிழ்வுற்றேன்.

பெருவரங்கள் பல பெற்றவனும் மாயச் செயலிலே வல்லவனுமாகிய இராவணன் உன் வில்லினால் அழிந்தொழிதல் உறுதி என்று கருதியே விபீடணன் உன்னைச் சார்ந்து வாழக் கருதுக் கொண்டான். அருள் உள்ளமும் தத்துவ ஞானமும் கொண்ட விபீடணனைப் போன்று வேறு ஒருவரைக் காண முடியாது. நீர் ஒருவராகவே தனியாய் இருந்து அரக்கர் அனைவரையும் அழிக்க முடியும்! அப்படியிருக்க, எளியவனை இவனைக் கண்டு அச்சமும், ஐயமும் கொள்வது ஏன்? இராவணனை அழிப்பதற்குத் தங்களுக்குத் துணையாக நிற்க விரும்பித் தங்களை அபயம் வேண்டி வந்திருக்கும் இவனைத் தாங்கள் சந்தேகிக்க வேண்டா.

இராவணன் இவனைத் துரத்தி விட்டான். அச்சமின்றித் தங்குதற்குரிய இடம் இதுவேயென்று எண்ணி உம்மிடம் அடைக்கலம் கோரி வந்துள்ளான். அபயம் என்று வந்த இவனை நாம் வெறுத்து ஒதுக்கலாமா? 'இவன் பகைவர் கூட்டத்தைச் சேர்ந்தவன். இவனை நம்பக்கூடாது!' என்று நாம் பேசுவதைக் கேட்டால், அரச நீதி தெரிந்தவர்கள் வாய்விட்டுச் சிரிப்பார்கள். பொருள் காரணமாகப் பங்காளிகட்குள்ளும் பகை வருதல் உலகில் நாம் காணும் ஒன்றுதானே! அதையும் நாம் ஆராயவேண்டாமா?

எவ்வகையில் பார்த்தாலும் இவன் வருகையைக் கண்டு அஞ்சுதற்கு எதுவும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. எனவே, இவன் வரவு நல்வரவேயாகும். இவன் நல்லெண்ணத்துடனேயே வந்திருக்கிறான் என்பதில் எனக்குத் தளராத நம்பிக்கை இருக்கிறது," என்று அனுமன் ஆராய்ந்து தன் அறிவின் ஆற்றலினால் நல்ல கருத்துக்களையே வடித்துக் கூறினான்.

'விபீடணனை ஏற்றுக் கொள்ளலாம்!' என்று காரணங்கள் பல காட்டிப் பேசிய அனுமனின் அறிவுக் கூர்மையை எண்ணி இராமபிரான் அகம் மிக மகிழ்ந்தான். அனுமனின் சொற்களில் சுருதி, யுக்தி, அனுபவம் ஆகிய

## அறிவிப்பு

ஸப்தகிரியில் வெளியிடப்படும் கட்டுரைகள் புகைப்படங்கள் ஆகியவற்றிற்கு எந்தவிதமான சன்மானமும் வழங்கப்படமாட்டாது

—தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

மூன்றும் பளிச்சிடுவதைக் கண்டு இராமபிரான் வியப்பெய்தினுன்; அனுமனின் தெளிந்த அறிவினைப் பலவாறு பாராட்டிப் பேசினுன். சுக்ரீவன் முதலானோர் பலர்க்கும் அனுமன் கூறிய கருத்துக்கள் உடன்பாடாய் இருந்தன. எனவே, விபீடணனை ஏற்றுக் கொள்ள முடிவு செய்தனர். அதன்படி விபீடணனுக்கு இராமபிரான் அடைக்கலம் தந்தான். விபீடணனும் இராமன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினுன். அனுமனின் தெளிந்த சொற்களாலேயே விபீடணனை இராமன் அங்கீகரித்தான் என்பது எவ்வகையிலும் பொருந்துவதாகத்தானே உள்ளது !

இராமனை அடைக்கலமாக வந்தடைந்த விபீடணன் இராவணனுடைய தோள்வலியையும், துணைவலியையும், அரண் வலியையும் விளக்கமாக எடுத்துக் கூறினுன். இலங்கையில் இருந்த அரக்க வீரர்களில் பெரும்பாலோரை அனுமன் தோரண வாயிலில் இருந்தவாறே கொன்றெழித்ததை முறையாக இராமபிரானுக்கு எடுத்துக் கூறினுன். அனுமனின் வீரம் விபீடணன் வாக்கால் வெளிப்படுதல் சிறப்புடையதன்றே!

பிராட்டியைத் தேடி இலங்கை சென்ற அனுமன் அங்கே நிகழ்த்திய வீரச் செயல்களை மேலும் விளக்கமாக இராமனுக்கு விபீடணன் எடுத்துக் கூறினுன். அசோகவனத்தை அழித்தது, பஞ்சசேனுபதியரை வதைத்தது, அட்ச குமாரனைத் தரையில் தேய்த்து அழித்தது, அரக்க வீரர் பலரைக் கொன்றெழித்தது, இலங்கையை வாலினுல் சுட்டது ஆகியவற்றையெல்லாம் விளக்கமாகக் கூறிய விபீடணன் மேலும் ஒரு கருத்தைக் கூறலானுன்.

'' ஐயனே! அனுமன் இட்ட நெருப்பால் இலங்கை பற்றியெரிந்து கொண்டிருந்தது. அப்போது இராவணன் செய்வதறியாது திகைத்தான். அவன் அப்பொழுது அணிந்திருந்த சந்தனமும், மாலையும், ஆடை அணிகளும் 'வெந்துபோகுமோ!' என்றஞ்சி, இலங்கையை விட்டு நீங்கி ஏழு நாள் வரைக்கும் ஆகாயத்திலேயே இருந்தான் என்றுல் அனுமனின் ஆற்றலை என்னென்பது. அஞ்சா நெஞ்சினனை இராவணனும் அனுமனின் ஆற்றலுக்கு அஞ்சி ஆகாயத்திலேயே தங்கி ஏங்கியிருந்ததை நான் நேரில் கண்டேன். இலங்கைத்தீ தானே அணைந்த பின்பே இராவணன் இலங்கைக்கு மீண்டு வந்து தெய்வத்தச்சனை அழைத்து இலங்கையைப் புதுப்பித்துக் கொண்டான்.

இத்தகைய மகாவீரனை அனுமனைத் தாங்கள் அடியவனுகப் பெற்றிருக்கிறீர் என்பதை யறிந்தே நான் தங்களைச் சரண் புகுந்தேன்! '' என்று விபீடணன் அனுமனின் வீரத்தைப் புகழ்ந்துரைத்தான்.

ஸ்ரீ சைல சிகரம்
திரு. எம். சிவசங்கரய்யா—கர்நூல்.



பிராட்டியைப் பிரிந்திருப்பதால் துவண்டுபோன இராமபிரானின் தோள்கள், அனுமனை அடியவனுகப் பெற்றதால் பெற்ற உயர்வினை எண்ணிப் பூரிக்கலாயின. தோளும் நெஞ்சும் பூரிக்குமாறு செய்த அனுமனை இராமன் பலவாறு புகழ்ந்து கூறத் தொடங்கினுன்.

''வீரனே! பலநாளாகப் பாடுபட்டுப் பெரும் அளவில் இராவணன் திரட்டிய படைவீரர்களில் பாதிக்கு மேற்பட்டோரை நீ ஒருவனுகவே இருந்து ஒரே நாளில் கொன்றெழித்தாய்! இலங்கை முழுவதையும் எரியூட்டி நீறுக்கினுய்! இனிமேலும் நான் இலங்கையில் செய்ய வேண்டியது என்ன உள்ளது ? உன் வீரச் செயல்களையெல்லாம் கேட்டதிலிருந்து, உன் ஒருவனுலேயே சீதையை மீட்டு வர முடியும் என்ற நம்பிக்கை எனக்கிருக்கிறது. என் வில் வல்லமையைப் பகைவர்கள் உணரவேண்டும் என்பதற்காகவே, நீ சீதையை மீட்டு வரவில்லையென்று எண்ணுகின்றேன்.

நீ ஒருவனுகவே இருந்து நிகழ்த்திய வீரச் செயல்களை நாங்கள் பலராகச் சேர்ந்துதான் நிகழ்த்த முடியும்! நான் செய்த நல்வினையே உன் உருவத்தில் வந்திருப்பதாக உணர்கின்றேன்! இலங்கைக்கு நீ முன்னதாகச் சென்றதனுல், இராவணன் வலிமையையும் என் வலிமையையும் உனக்கே உரியதாக்கிக் கொண்டாய். படைக்குந் தொழிலையுடைய பிரம தேவனுக்காக ஏற்பட்டுள்ள பிரம பதவியை நீ இப்பிறப்புக்குப்பின்னே அடைவாயாக! மறுபிறப்பில் நீ பிரமபதவியை அடைவது முற்றிலும் உறுதி!'' என்று அனுமனைப் புகழ்ந்துகூறி, பிரமபதத்தையும் அனுமனுக்கு இராமபிரான் வரமாக அளித்தார்.

இராமபிரான் புகழுரையைக் கேட்ட வலிமை மிக்க அனுமன் வணக்கமுடன் எழுந்திருந்து, தரையில் தன் உடல் முழுதும் படும்படி வணங்கி நின்று ஒன்றும் பேசாமல் புகழுரைக்கு நாணித் தலைகுனிந்து நின்றுன். அவ்வளவில் வானரத் தலைவனுகிய சுக்ரீவன் அனுமன் பெற்ற பெரும்பேறு குறித்துப் பேரானந்தம் அடைந்தான்.

(தொடரும்)

(ஆராய்ச்சிக் கட்டுரை)

# அனிச்ச மலர்

பண்டைத் தமிழ்ப் புலவர்கள் இலக்கியத் துறையோடு மட்டுமின்றிப் பல்வேறு துறைகளிலும் கூரிய அறிவு உடையவர்களாய் இருந்தனர். எட்டுத் தொகைப் பாடல்கள் பலவற்றைப் பாடிய புலவர்கள் வேறு பல துறைகளிலும் ஈடுபட்டிருந்தனர் என்பதை நாம் அறிய முடிகின்றது. மருத்துவன் தாமோதரனார், கணியன் பூங்குன்றனார் என்றெல்லாம் வருகின்ற பெயர்களைக் கொண்டு அவர்கள் மருத்துவம், வான நூல் ஆகியவற்றிலும் வல்லவர்களாக இருந்தனர் என்பதை நாம் உய்த்து உணரலாம்.

மருத்துவம் தமிழகத்தில் ஓர் அரிய கலையாக வளர்க்கப் பெற்றது. மனிதனின் உடலிற்றோன்றும் பல்வேறு நோய்களையும், அந்நோய்களைத் தீர்க்கும் மருந்துகளையும் பண்டைத் தமிழர் தெளிவாக உணர்ந்திருந்தனர். அம்மருந்துகள் யாவும் தாவர மூலிகைகளில் இருந்தே செய்யப்பட்டன. எனவே ஒவ்வொரு வகைத் தாவரம் பற்றியும் அவர்கள் தெளிவாக உணர்ந்திருந்தனர் என்பதனை நாம் உணரலாம். பல நோய்களுக்கு ஆங்கில முறையில் இன்னும் மருந்துகள் கண்டு பிடிக்கப்படவில்லை. சான்றாக "மஞ்சட்காமாலை" என்னும் நோய்க்கு இன்னும் ஆங்கில முறை மருந்து இல்லை. ஆனால் "கீழா நெல்லி" என்ற தாவரம் இந்நோய்க்கு நல்ல மருந்து என்று கண்டுபிடித்த நம்முன்னோர்களின் அறிவுத் திறனை நாம் வியந்து போற்றாமல் இருக்க இயலாது.

நம் முன்னோர்களின் தாவர இயல் அறிவின் நுட்பத்தையும், திண்மையையும், கூர்த்த நோக்கினையும் குறிப்பிட இன்னும் பல சான்றுகளைக் கூற முடியும். சூரிய காந்தி என்ற பூ எப்போதும் சூரியன் இருக்கும் திசையையே நோக்கும். இதனாற்றான் இப்பூவிற்கு இப்பெயர் வந்தது. இது போல் நெருஞ்சிப் பூவும் எப்பொழுதும் சூரியன் இருக்கும் திசையையே நோக்கும். நெருஞ்சிப் பூ மிகச் சிறியது. இதனை நாம் கூர்ந்து நோக்குவதில்லை. இப்பூ எப்பொழுதும் சூரியன் இருக்கும் திசையினையே நோக்கும் என்ற செய்தி,

"செங்கதிர் விரும்பும் பைங் கொடி
நெருஞ்சி" (4:14-15)

எனப் பெருங்கதையிலும்,

"நீள் சுடர் நெறியை நோக்கும்
நிரையிதழ் நெருஞ்சிப் பூப்போல்"
(461)

எனச் சீவக சிந்தாமணியிலும்,

"சுடரொடு திரிதரு நெருஞ்சி போல்"

என அக நானூற்றுள்ளும் தெளிவாகக் கூறப்பெற்றுள்ளது.

## போதும் பூவும் :

ஒவ்வொரு பூவும் ஒவ்வொரு பொழுதில் மலரும். பூக்களின் மலர்ச்சியைக் கொண்டே பொழுது அறியப்பட்டது. போது என்ற சொல்லே பின்னர் பொழுது என்று ஆயிற்று. அப்போது, இப்போது என்ற சொல் உலக வழக்கில் உண்டு. அப்பொழுது, இப்பொழுது என்றும் கூறுதலும் அப்பொருளையே தரும். போது என்ற சொல் பூவிற்கு முதலில் வழங்கப் பெற்றது. பின்னர் பூ மலர்கின்ற காலத்திற்கானது ஆகுபெயர். போது என்ற சொல் இலக்கியங்களில் பூ, பொழுது ஆகிய இரண்டினையும் குறிக்கக் கையாளப் பெற்றுள்ளது கொண்டு இதனை நாம் உணரலாம்.

## புஷ்ப விதியும் கோயில் பூசையும் :

எல்லாத் தாவரங்களும் பூத்துக் காய்ப்பதில்லை. சில பூக்கும், ஆனால் காய்க்காது. சில பூவாமலே காய்க்கும். இவற்றுள் பூத்துக் காய்க்காத மலர்களையே இறை வழிபாட்டிற்கு நம்முன்னோர் பயன்படுத்தினர்: அந்தந்தக் காலங்களில் மலர்ந்த பூக்களைக் கொண்டு அந்தந்தந்தக் காலங்களில் வழிபட வேண்டும் என்று புஷ்ப விதி என்ற நூலில் கூறப்பெற்றுள்ளது. நள்ளிருள் நேரத்தில் மலர்வது நொச்சி என்ற மலர் ஆகும். இந்த மலரைச் சார்த்தி இரவு வழிபாடு ஆற்றுதல் வேண்டும். இம்மலர் இரவு பன்னிரெண்டு மணிக்கு மலரும். இதனால்தான் இரவு வழிபாடு அர்த்த யாமம் என்று கூறப்பட்டது போலும். முற்காலத்தில் இவ்வழிபாடு இரவு பன்னிரெண்டு மணிக்கு நிகழ்ந்திருக்க வேண்டும்.

## மலர் வகை :

இம் மலர்களையும் நான்கு வகையாகப் பிரித்தனர். நிலப்பூ; நீர்ப்பூ, கொடிப்பூ, கோட்டுப்பூ என. தாமரை குவளை முதலியன நீர்ப்பூ; நெருஞ்சி முதலியன நிலப்பூ; முல்லை முதலியன கொடிப்பூ. மகிழ் முதலியன கோட்டுப்பூ.

## அனிச்ச மலர் :

இந்நால்வகைப்பூக்களுள் அனிச்ச மலர் எவ்வகையைச் சார்ந்தது என்று தெளிவாக இலக்கியங்கள் கூறவில்லை. இவ்வனிச்ச மலர்பற்றி சங்க இலக்கியத்திலும், திருக்குறளிலும் பல வாறாகக் கூறப்பட்டுள்ளது.

திரு. ஆர். நாவுக்கரசு, M.Com.,
குடந்தை-1.

"மோப்பக் குழையும் அனிச்சம்"
எனவும்,

"அனிச்சப்பூ கால்களையாள் பெய்
தாள்" எனவும்,

"அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்" எனவும்,

திருக்குறளில் குறிப்பிடப் பெற்றுள்ளமையால் இவ்வனிச்சமலர் முகர்ந்து

பார்த்த அளவில் வாடிவிடும் என்பதும், தலையில் சூடிக் கொள்ளக் கூடியது எனவும், மிகவும் மென்மையானது என்பதும் விளங்குகின்றது.

இம்மலரைப் பற்றித் தமிழறிஞர்கள் பலரும் ஆராயத் தலைப்படவில்லை. கலைக்களஞ்சியத் தொகுப்பிலும் திருக்குறட் செய்திகள் கூறப்பட்டுள்ளனவேயன்றி வேறெதுவும் குறிப்பிடப்படவில்லை. கம்பன் அடிப்பொடி திரு. சா. கணேசன் அவர்கள் இது கோட்டுப் பூ எனவும், வேதாரணியம் கோடிக்கரை கோயிலில் இம்மலர் உள்ளது எனவும் ஒரு முறை என்னிடம் கூறினார்கள்.

ஆனால் இலக்கியங்களில் மாறுபட்ட இரு கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன. "சேந்தன் திவாகரம்" இவ்வனிச்சத்தை மரப்பெயர்த் தொகுதியுள் வைத்து "நறவம் சுள்ளி அருப்பலம் அனிச்சம்" என்று கூறியுள்ளது. இக்கருத்தைப் பின்பற்றிப் பிங்கல நிகண்டுள்ளும் அனிச்சம் மரமாகக் கூறப்பட்டுள்ளது. சூடாமணி நிகண்டும் இதனை மரமாகவே கொண்டு "அங்கான அனிச்சம்தானே அருப்பலம் நறவம் சுள்ளி" (நான்காவது: மரப்பெயர்: 7) என்று குறிப்பிடுகின்றது. இந்நிகண்டு நூல்களுள் சேந்தன் திவாகரம் காலத்தால் முந்தியதும் ஏனையவற்றிற்கு முதனூலும் ஆகும்.

ஆதி வராகசுவாமி சிற்பம்-சிம்மாசலம்.
திரு. கே. சத்திராஜு—விசாகை-16.



கபிலர் தமது குறிஞ்சிப் பாட்டில் ஒண் செங்காந்தள் ஆம்பல் அனிச்சம் தண் கயக்குவளை குறிஞ்சி வெட்சி (62-63) என்று குறிப்பிடுகின்றார். இதில் அனிச்ச மலருக்கு முன்னர் வைத்த ஆம்பலும், பின்னர் வைத்த குவளையும் நீர்ப்பூ வாதலின் அனிச்சமும் நீர்ப்பூவாக இருக்கக் கூடும் என்று தோன்றுகின்றது. ஆயினும் கபிலர் எல்லா மலர்களையும் ஒரு வரையறைக்கு உட்பட்டுக் குறிப்பிடாமல் விடுத்ததினால் இது நீர்ப்பூவே என்று உறுதியாகச் சொல்ல இயலவில்லை.

பின்னர் வந்த கச்சியப்ப முனிவரும் மகாவித்துவான் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களும் இதனை நீர்ப்பூ என்றே குறிப்பிடுகின்றனர். ஸ்ரீ பிள்ளையவர்கள் ஆதாரமாகக் கொண்டது கச்சியப்ப முனிவர் வாக்கேயாகும். கச்சியப்ப முனிவர் தமது நூல்களில் மூன்று இடங்களில் அனிச்சம் நீர்ப்பூ என்றே தெளிவாகக் கூறுகின்றார்.

"கமலம் செங்கழுநீர் அனிச்சம் கமழ்
குமுதம் வள்ளை கொடிவிடு சைவலம்
அமிழ்தமென் மொழி ஆற்றுக் காலாட்டியர்
தமதுமெய்யினல்லாற்றனையில்லையே"
(நாட்டுப்: 108)

எனத் தணிகைப் புராணத்திலும்

"சைவலம் தாமரை குவளை தண் குமுதம் கொடிவள்ளை
தெய்வமணம் கமழ்நீலம் திகழ் அனிச்சம் எனும் பகைகட்கு
உய்வகை செய்யாதவர்கள் உடன் இருந்த பெரும் பிழையால்
கைவலத்திற் பறித்தெறிந்தார் தது விய புல்லாதிகளும்"
(நாட்டுப்: 116)

என விநாயகப் புராணத்திலும்,

"நடக்கலுற்றமையால் நம்பகையெல்லாம்
அடர்க்கலுற்றனம் அத்தகுதாட்பகை
கிடக்கலுற்ற அனிச்சமும் கீழ்ந்து மென்று
இடக்கலுற்ற அவற்றினை எங்கணும்"
(நாட்டுப்)

எனத் திருவானைக்காப்புராணத்திலும் இச்செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

இங்ஙனம் இருமாறுபட்ட கருத்துக்கள் கூறப்படுவதினால் அனிச்ச மலர் வகையை வரையறுப்பதில் பல்வேறு தடைகள் நிகழ்கின்றன.

எனினும் கச்சியப்ப முனிவர் வாக்கே ஏற்புடையது என்றும் தோன்றுகின்றது. அதற்குப் பின் வரும் காரணங்களைக் கூறலாம்.

(1) மற்றமலர்களை விட கோட்டுப் பூக்கள் மென்மையுடையன அல்ல. ஆனால் நீர்ப்பூக்கள் பொதுவாக மென்மையுடையன. இக்காலத்தும் தொட்டால் சிணுங்கி என்ற தாவர இனம் நீர் நிலைகளிலும் அதன் ஓரங்களிலும் காணப்பெறுகின்றது. இதனைத் தொட்டால் மலர், இலை முதலியன வாடிச் சுருங்கிவிடும். இது போன்ற மென்மையான பூக்கள் நீர்ப் பூவாகவே இருப்பதனால் அனிச்சமும் நீர்ப்பூவாகவே இருத்தல் வேண்டும்.

(2) கச்சியப்ப முனிவர் அனிச்சம் நீர்ப்பூ என்ற செய்தியைத் தெளிவாக உணர்ந்திருந்ததினால் தான் தமது நூல்களில் இதனை மிக விளக்கமாகக் கூறியுள்ளார். அவருடைய நுண்மாண் நுழை புலத்திற்குப் பல சான்றுகளைக் கூறலாம். கம்பராமாயணத்தில் வரும் "மயின் முறைக் குலத்துரிமை" கச்சியப்ப முனிவரால் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. கச்சியப்ப முனிவர் தவிர வேறுயாரும் இச்செய்தியைத் தெளிவு படுத்தவில்லை. அது போன்று கச்சியப்ப முனிவர் போல், இதர புலவர்கள் யாரும் அனிச்ச மலர் பற்றி விதந்து பேசவில்லை. எனவே அனிச்சம் நீர்ப்பூ என்றே கொள்ள வேண்டியுள்ளது. அறிஞர்கள் இது பற்றி இன்னும் ஆராய்தல் வேண்டும்.



# திருவேங்கடவனின்

# திருவருள் தேவி



திரு. எஸ். வி. ராமசுவாமி,
செகந்திராபாத்

இறைவனை 'நிர்குணன்' என்று பேசும் சுருதி வாக்யங்கள், அவன் (ஷாட்குண்ய) ஆறு குணங்களின் (ஞானம், பலம், ஐச்வர்யம், வீர்யம், சக்தி, தேஜஸ்) எல்லை நிலமாகப் போற்றப்படும் சுருதி வாக்யங்களோடு மாறுபடாமல் அவன் சகல கல்யாண குணங்கள் நிறைந்தவன் என்றே பொருள் காண்பர் பெரியோர். ஆனால் இக்குணங்கள் நிறைந்த இறைவன்பால் நாம், குற்றமே குடிகொண்ட நாம் அண்டுவதெங்கனம் என்று ஐயுறுங்கால் மறைவல்ல மாபெரும் ஆசிரியர்கள் ''அவன் பரம காருணிகன்'' என்று பேசிய சொற்கள் செவியில் விழுகின்றன. நாமும் அவனை அணுகலாம் என்ற துணிபும் ஏற்படுகின்றது.

திருவேங்கடவனது இக்கருணையே ஓர் ஆசார்ய கவிஞருள்ளத்து அழகிய பெண்ணுருக் கொள்கின்றது. அவனே வேங்கடநாதன் என்னும் மாகவிஞன். அவனுள்ளத்தே மலர்ந்த இவ் வேங்கடவன் கருணையே தயா தேவி எனப் பெயர் பெறுகிறாள். தேனினும் இனிய நூற்று எட்டு வட மொழிப் பாக்களால் இத்தயா தேவியை நமக்கு அறிமுகப்படுத்துகின்றான் இக்கவிஞன். (''தயாசதகம்'' என்ற இக்காப்பியத்தை சிறந்த இசையில் அண்மையில் திருமலை திருப்பதி தேவஸ்தானம் இசைத்தட்டுகளாக வெளியிட்டு உலகை மகிழ்வித்தனர்) இத்தயா சதகத்தில் காணும் அத்தயா தேவியின் குணாதிசயங்கள் ஒரு சிலவற்றையேனும் சுவைக்க முயற்சிப்பதே இக்கட்டுரையின் நோக்கு.

திருவேங்கடவன் உள்ளத்து நம்பால் கருணை எண்ணம் கரைபுரண்டோடுகிறது. எதனால் கருணை? தான் படைத்த மக்கள், தன் ப்ரஜைகள், அன்புமயமான இன்ப வெள்ளம் என்ற கருப்பஞ்சாறு உறைந்தது. அதுவே ஸப்தகிரி என்று திருமலையைக் காண்கின்றான் கவிஞன்.

இயற்கையாகத் தோன்றிய ஓர் (மலையல்ல) கடல் திருப்பதி. இதனை யண்டிப் பருகுபவர் அவன் கருணா ரஸத்தையே சுவைப்பவராவர். இக் கருணைக்கடல் பொருள், இடம், காலம் இவைகட்கு அப்பாற்பட்டது என்பதை,

> '' கமப்யநவதிம் வந்தே கருணா
> வருணாலயம் |
> வ்ருஷசைல தடஸ்தானம் ஸ்வயம்
> வ்யக்திமுபாகதம் || ''

என்று பேசும் இக்கவிஞன் இம்மலையை நமக்குக் கிடைத்த ஓர் புதையலாக உருவகப்படுத்துகின்றான்.

வேங்கடமலைக்கு ''அஞ்சனகிரி'' எனும் பெயரும் தொன்மையானதே. மக்கள் பூமிக்குள் உள்ள புதையலை மையிட்டுப் பார்ப்பது வழக்கம். இவ் வஞ்சன மலையைத் தம் பார்வைக்குக் கொள்பவர்க்கு இம்மலையுள் நிறைந்து நம் காட்சிக்கும் உருவாகும் ஸ்ரீனிவாஸனையும் காணவல்லவராவர்.

ஆம், ஸ்ரீனிவாஸன் (மோக்ஷத்தை) மறுமையின்பத்தை யளித்துவிடுவான் என்று எண்ணிவிட வேண்டாம். நல்ல மக்களிடம் சேரும் மாபெரும் புதையல் போல் இதனைக் கிட்டும் யாவர்க்கும் இந்நிதி அறம், பொருள், இன்பம், வீடு என்ற நாற்பயன்களையுமல்லவா அளித்துவிடுகின்றது. இக்கருணை நிதி யாவர்க்கும் கிட்டக் கூடியது. சாதி மத வேற்றுமை, உயர்வு தாழ்வு என்று வேறு பாடுகளின்றி யாவருமே அடையலாம்.

> அகிஞ்சனநிதிம்ஸூதிம் அபவர்க்க
> த்ரிவர்க்கயோ :
> அஞ்சனாத்ரீச்வரதயாம் அபிஷ்
> டௌமி நிரஞ்ஜநாம் !

இப்படி பத்து ஸ்லோகங்களால் இம் மலையைக் கிட்டிய பின் இக்கவிஞன் உள்ளத்து ஸ்ரீனிவாஸனின் கருணையான தயா தேவியே உருவாகின்றாள். அவள் பவனி வரும் அழகு இவனை

ஈர்க்கின்றது. ஆம், திருவேங்கடமுடையான் கருணை என்னும் இத்தயா தேவி ஓர் பட்ட மகிஷியல்லவா? பேரரசி. திருவேங்கடமுடையானையே தன் வசமாக்கிக் கொண்ட இவனுக்கு அவன் குணங்களெல்லாம் பணிவிடை புரிகின்றன. அவனுடைய முதல் குணமான ஞானம் இவளுக்கு முன்னால் கட்டியங்கூறிச் செல்கின்றதுமட்டுமா? தீபம் பிடித்துக் கொண்டல்லவா செல்கின்றது! மற்ற ஐந்து குணங்கள், பலம், ஐச்வர்யம், வீர்யம், சக்தி, தேஜஸ் யாவும் இவளைப் பின் தொடர்ந்து இவள் ஏவலுக்குக் காத்து நிற்கின்றன (ஆம், அவனுக்குத் தயைசுரக்கும்போது வழிபடுபவர்களை, இப்படி முதலில் ஞானம். ஈந்து, மற்றவைகளைத் தேவைக்கேற்ப அளித்துக் காப்பாற்றுகிறானல்லவா!)

“ அநுசர சக்தியாதி குணாம்
அக்ரேஸரபோத விரசிதா
லோகாம் |
ஸ்வாதீனவ்ருஷகிரீசாம்
ஸ்வயம்ப்ரபூதாம் ப்ரமாணயாமி
தயாம் ||

இப்படி இத்தயா தேவி நம்மை யாட்கொண்டு அருளும் அழகைப் பல கோணங்களில் இனி ரசிப்போம்.

(தொடரும்)

## மதிப்புரை

# “ஸர்வ காரிய சித்தி பெற”

இச்சிறு நூல் வாழ்க்கையைத் திறமாக அலங்கரிக்கிறது. மகா மந்திரங்களின் மகிமை இம்மலரில் மலர்கின்றது. தாரக மந்திரத்தின் தத்துவம் திரிகரணசுத்தியுடன் தெரிவிக்கப்படுகின்றது. பஞ்சாக்ஷரம், அஷ்டாக்ஷரம் இவைகளின் உன்னதம் உச்சரிக்கப் படுகின்றது.

சர்வ கார்ய சித்தி பெற நூலாசிரியை விநாயக ஸ்தோத்திரத்தை செப்புகிறார்.

அதே போன்று, ஔவைப் பிராட்டியார் பகர்வதைப் பார்ப்போம்.

“ வாக்குஉண்டாம்; நல்ல மனம்உண்டாம்; மாமலராள்
நோக்குஉண்டாம்; மேனிநுடங்காது;—பூக்கொண்டு
துப்பூர் திருமேனி தும்பிக்கையான்பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு.

விநாயக் கடவுள் சிவபெருமானின் மூத்த திருக்குமாரர். இவரை வழிபடுபவர்க்கு நல்ல சொல்வளம், மனவளம் உண்டாகும்; திருமகளின் திருவருட்பார்வை உண்டாகும். அவர்களுடைய உடம்பு நோய் முதலியவற்றால் வருந்தாது. இன்ப வாழ்வு அமையும், என ஔவைப் பிராட்டி கூறுவதைப் போலவே, ஆசிரியை நமக்கு எடுத்துரைக்கிறார்.

இங்கு, ஒன்று நாம் தங்கு தடையின்றிக் கூறவேண்டியிருக்கிறது. பக்கம் இரண்டில், ஆஸ்துமா (ASTHMA) நிமோனியா (Lobar Pneumonia) முதலிய வியாதிகளின் காரணம் காணப்படுகிறது. இக்காரணம் தவறாக உரைக்கப்படுகிறது. இவ்வியாதிகள் நுரைஈரல் நோயால் ஏற்படுகின்றது. நுரை ஈரல் புண்பட்டாலும், கிருமிகளினாலும், வரக்கூடிய வியாதிகள் இவை. யானைக்கால் நோவு (Elephantiasis) என்னும் நோய் Culex Fatigans என்ற ஒருவிதக் கொசு கடிப்பதால் உண்டாகின்றது. அதில் அடங்கியக் கிருமிகள் நம் இரத்தத்தில் பரவுகின்றன. அவ்வப்பொழுது நம் உடம்பில் வீக்கம் உண்டாகிறது. இறுதியில் இந்த வியாதியால் துன்பப்படுகின்றான் மனிதன். க்ஷயரோகம்(Pulmonary Tuberculosis)என்னும் வியாதி கிருமிகள் (Bacillus Tuberculosis) வழியாக ஏற்படுகின்றது. குஷ்டரோகம் வருவது (Lepra Bacillus) என்னும் கிருமியினால்.

நம் சிந்தனையை ஊக்குவிக்கும் இச்சிறு புத்தகம், சில மாறுதல்களுடன் புதிப்பித்தால், மேலும் பொலிவுறும். இறைவனை வழிபடும்மார்க்கம் இதில் அடங்கியிருக்கிறது.

விலை : ரூ. 1–50 Dr. G. T. கோபாலகிருஷ்ண நாயுடு.

கிடைக்குமிடம் :

ஜகஜ்ஜோதி பிரசுரம்,
திருவிடைமருதூர்.

ஸ்ரீ ராமநாத சுவாமி கோயில்,
கும்பகோணம்.



# தள்ளினும் தள்ளாக்கோன்

திருமதி. க. தங்கம், புதுவை-1.

''அன்பினால் ஆகாதது உண்டோ''. அன்பினால் எதையும் சாதிக்க முடியும். கிட்டா எட்டாப் பழமான பெம்மானையும் அடைய முடியும். அன்புப் பாதையில் அடியெடுத்து வைத்தால் பாச வெள்ளம் பெருக்கெடுத்து ஓடி பக்திக் கடலுள் கலக்கும். பக்தியோ முக்தியாம் பதத்தை நல்கும். பக்தியுள்ளமோ அங்கெங்கு எனாதபடி எங்கும், "உண்ணும் சோறு பருகும் நீர் தின்னும் வெற்றிலை'' அனைத்திலும் கண்ணனைக் காணுகிறது. கண்ணனைக் காணாத கண் பயனற்ற கண்ணாததால் அம்மூர்த்தி கீர்த்தி பெற்றிருக்கும் இடத்தைக் காண பக்தியுள்ளம் விழைகிறது. அவ்வாறு விழைந்த உள்ளம் ஆங்குச் சென்று அவனருளை வேண்டி நிற்கிறது. அவ்வருள் எளிதில் கிட்டாமையால், "தம்மை உய்விக்க இறைவன் எழுந்தருளி வரவில்லையே என்று ஏங்கி நிற்கிறது.'' அவ்வேக்கத்தில் அவனருளினைப் பலபட கற்பனை செய்கிறது. உலகில் பொருள்கள் பல தோன்றுகின்றன. இவ்வருளைப் போன்றவனோ அவ்வருளைப் போன்றவனோ என்று பல வகையான அருளினை நினைந்து பாடுகின்றார் நம் தள்ளினும் தள்ளா வேந்தனாகிய குலசேகரர்.

தம்மைக் கரையேற்றுபவன் இறைவன் என்றும் துணையாய் இருப்பது அறம் என்றும் நினைவுறுத்துகின்றார். ''அவனையன்றி வாழ்வில்லை'' என்பதைப் பல உவமைகள் கூறி நினைந்து நினைந்து நெக்குருகி வித்துவக் கோடு என்னும் தலத்தில் எழுந்தருளியிருக்கும் திருமாலின் அருள் வேண்டிப் பாடுகின்றார். உள்ளத்தைக் கொள்ளைக் கொள்ளும் உவமை நலத்தை உளம் உருகப் பாடுகின்றார்.




"மணம் கமழும் மலர்கள் நிறைந்த சோலையுடைய வித்துவக் கோட்டில் எழுந்தருளியுள்ள பெருமாளே, நீ எனக்குத் தருகின்ற துன்பங்களைத் தடுக்கவில்லை என்றாலும், உன் திருவடிகளைத் தவிர எனக்கு வேறு புகலிடம் இல்லை! ஈன்ற தாயானவள் பெருஞ் சினங்கொண்டு வெறுத்து நீக்கினாலும் போகாமல், அவளது கருணையே எண்ணி ஏங்கி அழும் குழந்தையைப் போல நான் உன்னையே நம்பி இருக்கின்றேன்'' என்பதை,

'' அரிசினத்தாலீன்றதாய் அகற்றிடி
னும் மற்றவள் தன்
அருள் நினைந்தே யழும் குழவியதுவே
போன்றிருந்தேனே.''

என்ற அடிகளால் கூறுகின்றார்.

இத்திருப்பாசுரம், இறைவன் உயிர்களிடத்தில் காட்டும் அன்பின் பெருக்கான அருளுக்குத் தாய் குழந்தையிடத்தில் கொள்கின்ற அன்பின் பெருக்கையே உவமையாகக் காட்டுவதால் அத்தாயன்பின் சிறப்பு வெளிப்படும். எனவேதான் இவ்வருளைத் தாயாக, அருட் சக்தியாகச் சான்றோர்கள் உருவகப் படுத்திக் காட்டினர். இந்தத் தாய் சேய் அன்பின் தன்மையே இறைவனின் இறையன்பர்களிடையே நிலவும் அன்பாக மிளிர்வதை இவ்வாழ்வார் குறிப்பிட்டுள்ளார்.

இதே கருத்தினை,

'' பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப்
பரிந்து நீ பாவியேனுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்தமாய
தேனினைச் சொரிந்து புறம் புறந்திரிந்த
செல்வமே சிவபெருமானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப்
பிடித்தேன்
எங்கெழுந் தருளுவதினியே

(திருவாசகம். பிடித்தபத்து)

என்ற மாணிக்க வாசகர் பாடலானும் அறியலாம்.

தாயன்பு முதலில் கண்டன்பு; அடுத்து வளர்த்த பின் காணும் அன்பு,

''தாய்க்குப் பின் தாரமான'' காதலன்பு. அக்காதலன்பில் காதலியாக தன்னை நினைந்து,

''உயர்ந்த மதில்கள் சூழ்ந்த வித்துவக் கோட்டில் எழுந்தருளியுள்ள பெருமாளே! தனது காதலன் தன்னைப் புறக்கணித்து இகடித் தக்க செயல்களைச் செய்தாலும் அவனையன்றி வேறு ஒருவனை அறியாத குலமகளைப் போல, நீ என்னை அடிமை கொள்ளவில்லை என்றாலும் நான் உன் திருவடிகளையே பற்றியிருப்பேன்!'' என்று

'' கண்டாரிகழ்வனவே காதலன்றான் செய்திடினும்
கொண்டானை யல்லாலறியாக் குல மகள் போல''

என்ற உவமை வழி புலப்படுத்துகின்றார்.

அடுத்தநிலை,

'' ஈன்ற புறந்ததேல் என்தலைக்கடனே
சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடனே
நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடனே.''

என்பதான், காதல் வாழ்க்கையில் குடும்பப் பொறுப்பு, நாட்டு நலன் முதலியவை இடம் பெறுவதால் வேந்தன் நிலை நினைவுக்கு வருகிறது. வேந்தன் நிலையை தானும் கண்டுணர்ந்தவன் ஆதலால்,

''மீன்கள் திரிகின்ற வயல்கள் சூழ்ந்த வித்துவக் கோட்டில் உள்ள பெருமாளே! நீ எனக்கு அருள் புரியவில்லை யென்றாலும் உன்னையே அடைக்கலமாகப்புகுவேனன்றிஎனக்கு வேறு ஒரு பற்றில்லை. மன்னவன் ஒருவன் செங்கோல் முறை தவறித் துன்புறுத்தினாலும் அவனுடைய ஆட்சியையே நம்பி எதிர் நோக்கி வாழ்கின்ற குடிமக்களைப்போல நான் உன் திருவடிகளையே எண்ணிக் கொண்டிருக்கிறேன்.'' என்று முடி மன்னராகிய குலசேகரர் தம்மை குடிமக்களுள் ஒருவராகப் பாவிக்கப் பாடியுள்ள திறம் வேறுரைகுரியதாகும். இதனைத்,

'' தான் நோக்கா தெத்துயரம் செய்திடினும், தார்வேந்தன்
கோல் நோக்கி வாழும் குடி போன்றிருந்தேனே.''

என்கின்றார். இச்செயலைத் திருக்குறளோ,

'' வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
கோனோக்கி வாழும் குடி.''

என்று நவில்கிறது. வேந்தனன்பை நினைந்தவர் அடுத்து இறையை மருந்தாகவும் காணுகின்றார். ''அருமருந்து தனிமருந்து அம்பலத்தே கண்டேனே.'' என்னும் மருந்தாம் இறையை அடைய உதவுபவர் மருத்துவர். அவர் உடலுக்குப் பல துன்பங்களை (அறுத்தல், சுடுதல்) போன்றவற்றைச் செய்யினும் அவரை நோயாளர் வெறுப்பதில்லை. அதுபோல் இறைவர் தாக்கரும் துன்பம் தந்தாலும் அவை முக்தியின் பொருட்டே என்று பாகவதர் நினைப்பவர் என்று மருத்துவர் பால் மக்கள் கொள்ளும் அன்பை தான் இறைவர் பால் கொள்ளும் அன்பிற்கு உவமை காட்டுகின்றார். இதனை,

''வித்துவக் கோட்டம்மானே! மருத்துவன் நோயாளனின் நோயைக் குணபடுத்தக் கத்தியைக் கொண்டு அறுத்தாலும், தீயினாற் சுட்டாலும், அம் மருத்துவனிடமே அன்பு கொள்கின்ற நோயாளனைப் போல, நீ எனக்கு மிகுந்தத் துன்பத்தைத் தந்தாலும் உன் அருளையே எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறேன், என்ற பொருள்'' பட,

'' வாளாலறுத்துச் சுடினும், மருத்துவன்பால்
மாளாத காதல் நோயாளன் போல்.''

என்று பாடுகின்றார்.

இவ்வாறு பல்வேறு அன்பை உவமையாகக் கூறியவர் ''கங்கு கரை காணாத கடலை'' இறையன்புக்கு உவமையாக்குகிறார். கடலைப் போன்று கரைகாணா அன்பைக்காண, ''பிறவிப் பெருங் கடலை நீந்த'' உயிர்கள் எங்கிருந்து தோன்றியதோ, அவ்விடத்தையே மீண்டும் அடைதல் இயல்பு. அத்தகைய இறையின் திருப்பாதத்தை அடைய விழைதல் மனித இயல்பு இவ்வியல்பை,

''வலிமை பொருந்திய குவலயா பீடம் என்ற யானையை அழித்தவனே, வித்துவக் கோட்டு அம்மானே! உன் திருவடிகளைத் தவிர வேறு எங்குப் போய் அடைக்கலம் காண்பேன்? அலை வீசும் கடல் நடுவே நான்கு திசையிலும் போய் அலைந்து கரையைக் காணமல் தான் புறப்பட்ட இடமாகிய மரக்கலத்தின் உச்சியையே வந்தடைகின்ற பறவையைப் போல, நான் உன்னையே புகலாகக் கொண்டிருக்கிறேன்'' என்று சேரர்கோன் கடற் பறவையை உவமையாகப் பயன் படுத்தித் தமது மனநிலையை,

'' எங்கும் போய்க் கரைகாணா தெறி கடல் வாய் மீண்டேயும்
வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன்றேனே.''

என்ற இந்தப் பாசுரத்தால் ''முட்டைக்குள் கோழிவைத்தான், கோழிக்குள் முட்டை வைத்தான் ஏதும் புரியாமலே இருப்பான் ஆகிய இறைவன்' புறப்பட்ட இடத்தையும் பறவை போல நாம் அடைய வேண்டும் என்று அழகுற இயம்புகின்றார்.

இத்தகைய ''நின்பாதார விந்தமல்லால் அடியேர்க்கு ஒரு பற்றில்லையே.'' ''நின் திருவடியைப் பற்றுவதே'' என் கடன். ஏனெனில், ''திருவடியே வீடாயிருக்குமென்கின்றார்'' நக்கீரனார். திருவடியே வீடாயிருக்குமாதலின் அவ்வடி தன்னைத் தருமென்றது முத்தியை யளிக்கும் என்னும் கருத்தை உடையது என்பார் டாக்டர். உ. வே. சாமிநாத அய்யர் அவர்களும். இப்படியெல்லாம் புகழப் படுகின்ற இணையடியை குலசேகரரும்,

''வித்துவக் கோட்டம்மானே! சிவந்த நெருப்பே அருகில் வந்து வெப்பத்தைச் செய்தாலும் செந்தாமரை அதனைக் கண்டு மலர்ந்து விடாது. வானில் வரும் கதிரவனைக் கண்டே

மலரும். அதுபோல, உனது திருப் புகழையும், கல்யாண குணங்களையும் கேட்டு என் உள்ளம் உருகுமேயன்றிப் பிறரது சீர் கேட்டு என் உள்ளம் உருகாது'' என்று தமது உறுதியான பக்தியை, ''நான் உலகின்கண் உள்ள மாயையான புகழக்குச் செவி சாய்க்க மாட்டேன்,'' ''புகழெனின் உயிரும் கொடுப்பர்'' என்பது எந்நிலையில் பொருந்தாது. உலகியல் புகழ் மறையத் தக்கது. எப்படி தாமரை செந்தழல் அருகிருந்த போதும் வெங்கதிரோன் என்று கருதாதோ அது போல் எத்தகு புகழ் வந்தாலும் அது சிறப்பெனக் கருதாது நின் பாதார விந்தமே புகழெனக் கருதி என் உளம் மலரும். அப்படிப்பட்ட பதமலரை நீ காட்டாவிட்டாலும், கட்டாயம் காட்ட வல்லாய் அது உன் கடன் என்று கருதி யானும் உன்னை நோக்கிக் காத்திருப்பேன்'' என்கின்றூர். இதனைச்,

'' செந்தழலே வந்தழலைச் செய்திடினும், செங்கமலம்
அந்தரஞ்சேர் வெங்கதிரோற் கல்லாலலராவால்
வெந்துயர் விட்டாவிடினும் வித்துவக் கோட்டம்மா உன்
அந்தமில் சீர்க்கல்லா லகங் குழைய மாட்டேனே.''

என்பதான் அறியலாம்.

''வித்துவக் கோட்டம்மானே, மேகம் எவ்வளவு காலம் மழை பெய்ய மறந்தாலும், பெய்யாது பொய்த்தாலும் பயிர்கள் கார்முகில் எப்போது வரும் என்று எதிர்பார்த்த வண்ணம் இருக்கும். அதுபோல நீ எனது துன்பங்களைப் போக்காவிட்டாலும் எனது உள்ளமானது உன்னிடத்திலேயே ஈடுபட்ட வண்ணம் இருக்கும்.'' என்று தனக்கும் இறைவனுக்கும் உள்ள உறவு வானுக்கும் பயிருக்கும் போன்ற உறவு என்று தமக்கும் இறைக்கும் உள்ள இடைவெளியையும் தம் நம்பிக்கையையும் புலப்படுத்தி உள்ளார். இதனை,

'' எத்தனையும் வான் மறந்த காலத்தும் பைங்கூழ்கள்
மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும் மற்றவை போல்.''

என்கின்றூர். ''மாமுகில்'' இறைவனுக்கு ஏன் ஒப்பிட்டார் எனில், ''மாமுகில்'' பெரியார், சிறியார் என்று பாராது அனைவரையும் வாழ்விக்கும். மழை தன்னை வைதாரையும் வாழ்விக்கும் திறன் உடையது. மேலும், ''காண்பவை யெல்லாம் அவையே போலல்'' என்பதால் மால் வண்ணம் உடையது. திருமாலின் திருவருள் போன்றதால் மாலருள் வேண்டிய கோமான் திருவருளுக்கு மாமுகில் உவமையாக்கியமை உன்னி மகிழத் தக்கதாகும்.

மேலும், மாமுகில் பெய்தால் நீர் பெருகும். நீரால் அனைத்து நலனும் உண்டாகும். இதனை,

'' வரப்புயர நீர் உயரும், நீர் உயர நெல் உயரக்
நெல் உயர குடி உயரும், குடி உயரும் கோன் உயரும்.''

என்பதான் மக்களிடம் சிந்தனையும் இறையன்பும் தோன்றி ஆன்மாவும் உயரும். இறுதியில் ஆன்ம உயர்வால் இறையருள் கிட்டும். இத்தகைய தன்மையை எப்படிச் சென்றூலும் இறுதியில் அடைவது 'இறையடியே' என்பதை சேரர் பெருமான்,

''வித்துவக் கோட்டம்மானே! ஆறுனது பலவாறுக ஓடிப் பெருகினுலும் இறுதியில் கடலைத் தவிர வேறெரிடத்தில் புகுந்து நிற்காது. அதுபோல, தன் மனம் என்ற காட்டாறும் உன்னையே புகலாக அடையுமேயன்றி மற்றென்றை அடையாது'' என்று தெரிவிக்கின்றூர். இதனைத்,

'' தொக்கிலங்கி யாறெல்லாம் பறந்தோடி, தொடுகடலே
புக்கின்றிப் புறம் நிற்க மாட்டாத; மற்றவை போல்.

என்ற அடிகளால் விளக்குகின்றூர். இவ்வுமையைச் சிறிது வளர்ச்சி பெறச் செய்து கம்பரும், வள்ளலாரும் தம் பாடல்களில் குறிப்பிடுகின்றனர். அப்பாடல்கள் பின் வருமாறு:

'' கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையின் மறைகளாலும் இயம்பரும் பொருளீதென்னத்
தொல்லையில் ஒன்றேயாகித் துறை தொறும் பரந்த சூழ்ச்சிப்
பல் பெருஞ் சமயஞ் சொல்லும் பொருளும் போற் பரந்த தன்றே.''

(கம்பராமாயணம் ஆற்றுப்படலம்19.)

'' பொங்கு பலசமயமெனும் நதிகளெல்லாம்
புகுந்து கலந்திட நிறைவாய்ப் பொங்கி ஓங்கும்
கங்கு கரை காணுத கடலே''

(திருவருட்பா. முதல் திருமுறை. மகாதேவ மாலை. 48)

''மின்னலைப் போன்ற ஆழிப் படையை உடைய வித்துவக் கோட்டத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமானே! விரும்பாதவனையே விரும்பி வந்தடைகின்ற செல்வத்தைப் போல, நீ என்னை வேண்டாம் என்று புறக்கணித்தாலும் நான் உன்னையே விரும்பி நிற்பேன்'' என்று கூறுகின்றூர், குலசேகரர். இதனை,

'' நின்னையே தான் வேண்டி நீள் செல்வம் வேண்டாதான்
தன்னையே தான் வேண்டும் செல்வம் போல்.''

என்று கூறுகின்றூர். ''இறைவனே அழியாத செல்வம்'' என்பதை இதன் மூலம் சுட்டிக் காட்டுகின்றூர்.

இங்ஙனம் தமது பாடல் ஒவ்வொன்றிலும் அரிய உவமைகளைப் பெய்து அதன் மூலம் இறைவனின் இயல்பினை நம்மனோர் உணரும் வண்ணம் செய்யும் இவரது ஆற்றல் போற்றத் தக்கதாகும். வித்துவக் கோட்டம்மானின் திருவடிமேல் பற்றுக் கொண்டு குலசேகரர் அருளிச் செய்த இத்தமிழ்ப் பாடல்கள் பத்தினையும் ஓதவல்லவர்கள் நரகத்துயரை அணுக மாட்டார்கள் என்பதை இவர் பாடிய இறுதிப் பாடல் உணர்த்தி நிற்கிறது.

'திருவடி' அடைந்தார் நரகம் புகார் என்பதை ஆண்டாளும் மனதிற் கொண்டு தான் பாடிய பாவைப் பாட்டில் எம்பெருமான் சிறப்பைக் கூறும் போது முதலில்,

''அன்று இவ்வுலகம் அளந்தாய் அடிபோற்றி'' என்று போற்றிப் பாடுகின்ருர். பெரியாழ்வாரும் சேவடியையே காப்பாகக் கொண்டு,

'' பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்
பல்கோடி நூறுயிரம் [தாண்டு
மல்லாண்ட திண்டோள் மணிவண்ணு உன்
செவ்வடி செவ்வி திருக்காப்பு.''

என்கின்ருர். திருமழிசையாரும்,

'' நடந்த கால்கள் நொந்தவோ! நடுங்க ஞாலம் மேனமாய்.''

என்று பாதத்தைச் சிறப்பிக்கின்ருர்.

நம்மாழ்வாரோ குலசேகரர் வேண்டும் திருவடியின் சிறப்பை,

'' உயர்வற உயர்நல முடையவன் எவனவன்
மயர்வற மதிநல மருளினன் யவனவன்
அயர்வறு மமரர்களதி பதியவனவன்
துயரறு சுடரடி தொழுதெழுன் மனனே.''

என்று வினை தீர்க்கும் சுடரடியைத் தொழுது எழுமாறு பணிக்கின்ருர்.

இவ்வளவு சிறப்பு வாய்ந்த திருவடியை எத்தகைய துன்பம் வந்த போதும் "தருதுயரந் தடாயேல்'' இறைவன் இருப்பினும் அதனையே பற்ருகக் கொண்டு பற்றை விட வேண்டும்.

'' பற்றுக பற்றற்ருன் பற்றினை அப் பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.''

என்னும் மறைப்படி 'விடுப்பின்னும் விடா வெறியார்' போன்று தள்ளினும் தள்ளாக்கோனும் தன் கருத்தை விடாமல் மக்கட்கு வெளிப்படுத்திப் போந்துள்ளார்.



---

(16 ஆம் பக்கத் தொடர்ச்சி)

பாப காரியங்களாகவும், பித்தலாட்டங்களாகவும் அமைகின்றன. திரும்பவும் மறுநாள் காலையில் பிரார்த்தனையின் போது, 'இறைவா! நான் தெரிந்தும் தெரியாமலும் செய்த பிழையைப் பொறுத்தருள்வாயாக', என்று வேண்டுதல் செய்து விட்டால் போதுமா! இப்படிச் செய்வதானது ஏதோ இறைவனிடம் அனுமதி பெற்றுப் பாபம் செய்வதாகப்படுகிறது. இது போலி பக்தி. இப்படியெல்லாம் சொல்லி இறைவனை ஏமாற்றிவிட முடியுமா? ஒருக்காலும் முடியாது. உண்மையான பக்தன் எங்கும் எதிலும் பரமனையே காண்பவனுக எள்ளளவும் எதற்கும் மனத்தாலும் தீங்கு நினையாது நல்வாழ்வு வாழ்கிறன்.

இத்தகைய நித்தியயோகிகளுடைய "योग क्षेमं वहाम्यहम्'' (யோக க்ஷேமம் வஹாம்யஹம்) என்கிருர் பகவான். இறைவனையே யாண்டும் சார்ந்திருப்பவர்களது யோகத்தையும் க்ஷேமத்தையும் வழங்குதல் தனது கடமை என்கிருர் பகவான்.

योगं, क्षेमम् என்ற இரண்டு வார்த்தைகளும் மனித வாழ்வைச் சுருக்கிப் படம் பிடித்துக் காட்டுபவையாக அமைகின்றன. अप्राप्तस्य प्रापणं योगम् என்பது யோகத்திற்கு விளக்கம். அதாவது வேண்டியதைப் பெறுதல் யோகம். பிறகு प्राप्तस्य रक्षणं क्षेमम् அதாவது பெற்றதைப் பாதுகாத்தல் க்ஷேமம் ஆகிறது.

நமது வாழ்வில் நாம் பண்ணும் அனைத்து முயற்சிகளும் இந்த இரண்டு வார்த்தைகளில் அடங்கிவிடுகின்றன. பொருள் இல்லாதவன் பொருளைப் பெற விரும்புகிருன். பெற்ற பின் அதைப் பாதுகாக்க விரும்புகிருன். புகழ் இல்லாதவன் புகழைப் பெற விரும்புகிருன். அதைப் பெற்ற பின் அதைப் பாதுகாக்க விரும்புகிருன். அதைப் பெற்ற பின் 'அது தன்னை விட்டு நீங்கக் கூடாதே' என்று அதை எப்பொழுதும் பெற்று விளங்க விரும்புகிருன். குழந்தை இல்லாதவன் குழந்தை வேண்டுமே என ஏங்கித் தவிக்கிருன். பிறகு அதைப் பெற்ற பின் அந்தக் குழந்தை நீண்ட ஆயுளுடன் நெடு நாள் வாழ வேண்டுமே என விரும்புகின்ருன். வீடு இல்லாதவன், 'எனக்கு ஒரு சொந்த வீடு இருந்தால் நன்ருயிருக்குமே' என எண்ணுகிருன் வீட்டைப் பெற்ற பின் 'ஐயோ! இந்த வீடு என்னிடம் எப்போதும் இருக்கவேண்டுமே' என்று ஏங்குகிருன். இவ்வாருக நாம் நமது முயற்சிகள் ஒவ்வொன்றையும் எடுத்து ஆராய்ந்து பார்த்தால், முதலில் நம்மிடம் இல்லாத ஒன்றைப் பெறுவதற்கான நாட்டமும், பின்னர் அதைப் பெற்ற பின் அதைப் பாதுகாக்க வேண்டுமே என்ற ஏக்கமும் இருப்பது தெரியவரும். இதைத்தான் பகவான் யோகம், க்ஷேமம் என்ற இரண்டு வார்த்தைகளில் குறிப்பிடுகிருர்.

தன்னையே பூரணமாக பகவானிடம் ஒப்படைத்தவன் உயர்ந்த பக்தனுவான். அவனது யோகத்தையும் க்ஷேமத்தையும் தானே கவனித்துக் கொள்வதாக பகவான் நமக்கு இங்கு வாக்குறுதி தருகிருர்.

பொருளைத் தேடுபவர் பொருளை அடைகின்றனர். அருளை நாடுபவருக்கு இறைவனது அருள் கிட்டுகிறது. பொருளோ அமையவும் அழியவும் செய்கிறது. அருளோ அப்படியன்று. பொருளை நாடுபவருக்குப் பொருள் மட்டுமே கிட்டுகிறது. ஆனால் இறைவனது அருளை நாடுபவருக்கு பொருளும், அருளும் எல்லாம் சேர்ந்து கிட்டுகின்றன. பகவான் மீது பக்தன் காதல் கொண்டு விளங்கினுல் பக்தன் மீது பகவான் பித்தமே கொண்டு விளங்குகிருர்.

இதனுல்தான் ஒரு பக்தர் இறைவனைப் 'பித்தா' என்றே அழைக்கிருர். பகவானை நோக்கிப் பக்தன் ஒரு அடி எடுத்து வைத்தால், பக்தனை நோக்கிப் பகவான் பத்து அடி எடுத்து வைக்கிருர்.

பரம்பொருளை ஆராதியாது மற்ற தேவதைகளை வழிபடுதல் ஈசுவர ஆராதனை ஆகாதா என்ற ஐயம் அடுத்து எழுகிறது. அதற்கு விளக்கமும் உடனே வருகிறது.

(தொடரும்)

# கருணை அழகன் ★

திரு. நா. நாகராசன், B.A., H.R.P.
தஞ்சாவூர்.

''பூக்காத தன்மை கொண்ட நீல மணிக் கல் குன்றுகள் பூத்துவிட்டது போல் இளம் நீல வண்ணத்தில் இன்ப வடிவம் கொண்ட ராமா! கருணையினுல் வந்தது உன் அழகு; கருணையினுல் வந்தது உன் வீரம்; கார் மேகமே வாடும் பயிர்கள் கண்டு கருணையினுல் கருக் கொண்டது உன் வண்ணம்; போர் ஏறே: உன்னைத் தேடும் ஜானகியின் துயர் கண்டு கருணையினுல் வில்லினைத் தொட்டன நின் கரங்கள்.

வான் மழையாய் வழங்கும் வள்ளலே! உலகில் உண்மைச் செல்வம் எது என்று அறியாது, ஊர்ப் பொது மன்றில் குட்டி போட்ட நாய் ஒன்று, தன் குட்டிகளையும் மறக்க முடியாமல், பால் நினைந்தூட்டும் பசித்த வயிற்றையும் மறக்க முடியாமல் தெருவில் கிடக்கும் எச்சில் இலைகளுக்கும் தன் குட்டிகளுக்கும் இடையே ஓடியோடி இளைத்தது போல் உலகத்திற்கும் உள்ளத்திற்கும் இடையே களைத்த என்னை உன்றன் இசைக் கருணையால் மாருத செல்வமாக்கிக் கொண்டாய். உன்றன் திருக்கோயிலிலிருந்து வரும் நாதசுர இசை என்னை 'வருக! வருக! வற்ருத அருள் பெறுக!' என்று அழைக்க நின்னிடம் எத்தனை எத்தனையோ வரங்கள் பெற விரைந்து வந்தேன். ஆனுல் நின்றன் அருள் நெஞ்சினை நினைத்தவுடன் எல்லாவற்றையுமே மறந்து விட்டேனே ஐயா!

இறைவா! கடல் வெள்ளமாய் பாய்ந்தோடும் காவிரி ஆற்றின் கரையில் நின்றபடி உன்னை நோக்க, உன் உருவம் எதிர்க்கரையில் வானேங்கிய மூங்கில் மரங்களாய், பசுமைப் பூத்தபடி நின்று ஏதோ ஒரு கனவின் இன்பக் காட்சியை நினைவுப் படுத்திக் கொண்டே இருக்கின்றது. காண்பது கனவுமட்டுமல்ல நனவும் தான் என் பதை நினைவுபடுத்துவதைப் போல் காட்டுப் புரு ஒன்று தூரத்தில் இருந்தபடி தன் மோனக் குரல் கொடுக்க, பக்கத்தில் இருந்தபடி கூவும் விட்டுச் சேவல் காட்டுப் புருவின் குரலுக்கு கட்டியம் கூறுகின்றது. இரு குரல்களையும் ஒரே நேரத்தில் கேட்டு, ஒரு பொருளாகவும் இல்லாத நான் இரு பொருளாகவும் மாறி கண்ணில் தெரியாத காற்றில் மிதக்கின்றேன்.

ராமா! பகலை அறிய கதிரவன் வேண்டும்; சோலையை அறிய மரங்கள் வேண்டும்; உன்னை அறிய உன்றன் அருள் நெஞ்சம் ஒன்றே போதுமே உள்ளத்தை எண்ணி மகிழும் நான் உன்றன் அருள் முகத்தையும் கடலன்ன கண்களையும் நோக்க விரும்புகின்றேன். ஆனுல் தென்றலின் இனிமையை ரசித்த மலர்கள் மரத்தைக் காண வேண்டி காம்பை நிமிர்த்து அம்மலர்கள் மரத்திலிருந்து உதிர்ந்த விட்ட கதையாக அல்லவா என் நிலையும் ஆகிவிட்டது.

தலைவா! உன்றன் திருக்கோயிலின் முன்னே வந்து நான் நின்றதும் செங்கதிரும், வெண்ணிலவும் உன் கோயி



லின் இரு விளக்குகளாகி என் பக்கத்தில் வந்து நிற்கின்றன. உன்றன் திருமேனியில் புரளும் வண்ண மலர்கள் வெண் மஞ்சுத் திரள்களாகி இதயத்தில் வந்து மோத நீலவானம் நித்திலப் பந்தலாகி என்கைக்கு எட்டும் தூரத்திற்கு வருகின்றது. என் கால்கள் உன் கோயிலை அடைந்த பிறகுதான் ஓர் இடத்தில் அமைதியாக அமரு

ஐயா! கரையில்லாத கருணைக் கடலே! உன்னிடமிருந்து எத்தனை எத்தனை அழகு மேகங்கள் எழுந்திருக்கும்! எத்தனை எத்தனை ஆறுகள் காடும் நாடும் ஓடி கண்டவர்களுக்கெல்லாம் பேரின்ப வீடு அளித்திருக்கும்! உன்றன் இசைக் கருணை அல்லவா பல பல பிறவிகளுள் மாடாய், மரமாய் இருந்த என்னை மனிதனுக்கி உள்ளது. உன்றன் கருணை




# எங்களுடைய "ஸப்தகிரி" விற்பனைப் பிரதிநிதிகள்

திரு. கே. ராகவாச்சாரி,
நியூஸ் ஏஜெண்ட்,
ரமணி ஸ்டோர்ஸ்,
கும்பகோணம்.

திரு. வி. வி. ரங்கசுவாமி,
ஸ்ரீ வேங்கடேசாயா ரங்கநாதம்
சிட்பண்ட்ஸ்,
6-14-140, கோட்டூர் (சாலை)
பாளையங்கோட்டை - R.M.S.
திருநெல்வேலி-2.

திரு. கே. ரங்கசாமி நாயக்கர்,
குமாரபுரம்,
நல்லை (அஞ்சல்)
கோவில்பட்டி R. S.
சாத்தூர் (வழி)
இராமநாதபுரம் மாவட்டம்.

திரு. பி. கே. சுந்தரராஜன்,
21, முராரிவரதய்யர் தெருவு,
சேலம் டவுன்.

திரு. எஸ். ராமகிருஷ்ணய்யா,
ஸ்ரீ மாருதி காபி வர்க்ஸ்,
ஸ்டேஷன் ரோடு,
ஹோஸ்பெட் (அஞ்சல்) R. S.
கர்நாடக மாநிலம்.

திரு. சி. எஸ். குண்டுராவ்,
845, பி. பி. கார்டன்,
கே.ஆர். மொஹல்லா (அஞ்சல்)
மைசூர்-4.

திரு. எஸ். ஸ்ரீகாந்த ஐயர்,
7/114, செல்லாண்டி அம்மன்
கோயில் வீதி.
19—வது பிளாக்
மேட்டூர் அணை ஆர். எஸ்.

திரு. ஆர். சம்பத் குமார்,
35, வணப்பட்டரை வீதி,
தெப்பக்குளம்.
திருச்சி-2

திரு. வாசு வெங்கடேஸ்வரன்
ஸ்ரீ கண்ணன் ஸ்டோர்ஸ்,
[illegible] பஜார், எம். ரெட்டிபட்டி,
[illegible] அருப்புக்கோட்டை.

திரு. கே. பி. ஆர். சுவாமி,
106, மஹீம் மேன்சன்,
ஸ்டேஷன் ரோடு,
மஹீம், பம்பாய்-16.

பாஸ்கர் நியூஸ் ஏஜென்சி,
டெய்லி மார்கட்,
ஜெய்பூர் (அஞ்சல்)
கோராபுட் மாவட்டம்.

தினமணி ஸ்டோர்ஸ்,
8/1, பழைய போஸ்ட் ஆபிஸ் வீதி
கோயம்புத்தூர்-18

திரு. ஏ. சி. நரசிம்மன்,
9, அமுத நிலையம்,
ஐக் அக்ரஹாரம்.
ஆற்காடு (வ. ஆ. மாவட்டம்)

டாக்டர். பி. கே. கேசவன்.
செவன் ஹில்ஸ்,
2, எம்.எம்.எம். ரெட்டி வீதி
ஜோலார்ப்பேட்டை.

திரு. திட்டகவி. சுப்ரமண்யம்,
15, 6-வது வீதி,
சுப்ரமண்யபுரம், காரைக்குடி.

திரு. ஏ. அருணாசலம்,
22/13. வாளிபாளையம்.
1-வது வீதி, திருப்பூர்.

திரு. எஸ். என். கிருஷ்ணசர்மா
10-354 சின்னக்கடை பஜார்,
பரமக்குடி (அஞ்சல்)
இராமநாதபுரம் மாவட்டம்.

இலட்சுமி புக ஸ்டால்,
5-2-64, பாலாஜி வாடா,
பெத்தபல்லி (அஞ்சல்)
கரீம்நகர் மாவட்டம். (ஆ.பி.)

திரு. கே. எஸ். சோதண்ட
ராமய்யா, M.A., B.O.L,.,B.T.,
ஓசூர். தர்மபுரி மாவட்டம்.

திரு. கே. சேஷாத்ரி,
1, தாதம் வீதி,
ஸ்ரீரங்கம் - 620006.

திரு. எச். ராமாராவ்,
3-4-207, பாக் லிங்கம் பல்லி,
காச்சிகூடா (அஞ்சல்)
ஹைதராபாத் (ஆ.பி.)

திரு. பி. விஜயேந்திரா,
நியூஸ் ஏகஜண்ட்,
நகரி (அஞ்சல்)
சித்தூர் மாவட்டம் (ஆ.பி.)

திரு. எம். பாண்டுரங்கம்,
பாண்டு ஜெனரல் ஸ்டோர்ஸ்,
நேரு பஜார்.
மதனபள்ளி (அஞ்சல்)
சித்தூர் மாவட்டம் (ஆ.பி.)

திரு. ஏ. கே. சுப்ரமண்யம்,
நியூஸ் ஏஜெண்ட்,
பாகாலா (அஞ்சல்)

திரு. ஜி. ஸ்ரீநிவாச ஐயங்கார்,
965, வெங்கோப ராவ் லேன்,
ஸ்ரீ வேங்கடேஸ்வர பெருமாள்
தஞ்சாவூர். [வீதி,

திரு. ஏ. ரங்காச்சார்யா,
12-5-5. எஸ்.வி.என். வீதி,
பாபைய்யா பேட்டை,
சேமன்,
வரங்கல் (அஞ்சல்) ஆ.பி.

திரு. எச், என். இலட்சுமி
நரசிம்மைய்யா,
A 106, பெல் காலனி
ஜலஹல்லி (அஞ்சல்)
பெங்களூர்-13.

திரு. எம். பாலசுப்ரமண்யம்
நாகுல் கட்டா வீதி,
தாடிபத்திரி,
அனந்தபூர் மாவட்டம்.

திரு. எஸ். மெங்கதால்,
3, ரங்கநாதபுரம் தெரு,
அவனாசி.

திரு. டி. எஸ். கிருஷ்ணமூர்த்தி,
சிரௌதிகள்
74, ஏ, கிழக்கு முதல் தெருவு,
மன்னார்குடி-614001.

கின்றன; அதோடு என் உள்ளமும் ஓய்வு பெறுகின்றது. உன்றன் அருளை எண்ணி கை தூக்கி வணங்கும்பொழுது என்றன் இரு கரங்களையும் அந்த வான் முகட்டினை முட்டும் அளவிற்கு தூக்கினாலும் என் மனத்திற்குக் கொள்ளவில்லை. ஆனால் என்றன் கரங்களால் என் வீட்டு கூரையினைக் கூட தொட முடியவில்லையே! உனக்காக எடுத்த கற்பூர சுடரைக் காணும் பொழுது கொழுந்து விடும் ஆசையால் உன்னைத் தழுவுகின்ற நான், கடைசியில் அணைந்து அடங்கி விட்ட கற்பூரச் சுடரில் ஒன்றும் இல்லாது இருக்கும் பொழுதும் என்னை நீ கண்டு கொள்ளவேண்டும். ஐயனே! நீயாகவே எங்களைத் தேடி கண்டு கொள்வதில்தான் எங்களுக்கு உண்மை இன்பமே இருக்கிறது. உன் முன்னே அலங்கார அடுக்குத் தீபத்தை தூக்கிக் காட்ட, அங்கே உன்றன் பார்வை பட்டவுடன் தூக்கிய விளக்கு இறங்க இறங்க வானத்து மீன்களெல்லாம் விளக்கோடு விளக்காகக் கீழே இறங்குகின்றனவே ஐயா!

காலை நேரத்து செங்கதிரவன் மேகத்தினூடே மறைந்து இருந்தாலும் அதன் ஒளி மேனியை செந்தாமரை மலர்கள் உலகுக்கு எடுத்துக் காட்டுகின்றன. மலை அருவியின் ஓசை கேட்டு நிற்கும் காட்டு மரங்கள் கருமேகங்களைக் கண்டபடி மழைக்கனவு காண்கின்றன. சிறிது நேரத்தில் கனவும் நனவாகிவிட்டது. பெரு மழையில் நனைந்த பருத்த மரங்கள்கூட தம் கிளைக் கரங்களைக் குவித்துக் குவித்து பேரின்ப வெறியினால் அடிமரத்தோடு சேர்ந்து ஆடுகின்றன! ராமா! என் கண் கண்ட தெய்வமே! உன்னைக் கருணை மேகம், கருணை மேகம் என்று புகழப் புகழ இப்போது என்றன் கண்களிலேயே நீ வந்து அமர்ந்து விட்டாயே! இந்த உடல் நனைய, உள்ளம் நனைய என் இன்பக் கண்ணீர் வெள்ளத்தில் நானே மூழ்கித் திகைக்கின்றேனே! இறைவா!

பகலின் வெயில் தாங்க முடியாமல் ஓடி ஒதுங்கி இருந்த மான்கள் இரவு ஆனதும் நீர் வேட்கை தாங்காமல் வற்றிவிட்ட ஆற்றினை நோக்கி ஓடுகின்றன. வெண்ணிலவின் ஒளியில் வெள்ளி மணல் வைர ஓடையாக ஓட, நீர் வேட்கையில் மான்கள் ஈர மணலை நக்கி நக்கி விழுங்குகின்றன. அங்கே கானகத்தில் அந்த காட்சி. இங்கே தன் அன்புத் தலைவனுக்கு மடல் விடுக்க அமர்கின்ற கன்னி ஒருத்தி ஏடும் கோலும் எடுத்து வைத்தவள் தன்னை மறந்து தூங்கி விடுகின்றாள். அவளுடைய அன்பன் கனவின் வந்து அவளது நனவின் கனவுகளை கனவில்

தொடர் கவிதை :

# திருவேங்கடவர் பொன்னூசல்

செஞ்சொற்கவி. T. S. ராஜகோபாலன்

## அந்தர்யாமி—தன்னை நாடாதவர்களது உள்ளத்திலும் உறைவது

நாடாத தனயற்குத் தன்னைக் காட்டா
தயல்மறைந்து நலம்பெய்யும் நற்று யொப்பக்
கூடாத மானவர்தம் மனத்த மர்ந்து
கோடாத கருணைமிகப் பொழியுங் கோவே!
வாடாத மலரேந்தி வானை யாளும்
முன்னவர்சேர் வேங்கடத்தி னுச்சி யின்பால்
கோடேறு வானரங்கள் பாலுங்கொண்ட
நோக்குடைய திருமார்வர்! ஆடி ரூசல்.

## விபவம்—வாமனவதாரம்

அடியடைந்து குறையோது மன்பர்க் காக
அருங்குறளாய் மாவலிபா லடிமூன் றேற்றுப்
படியளந்து வானிமிர்ந்து பாரி துய்யப்
பாவனமாம் புனல்பெய்தீர்! பரிவா லின்று
கடியணைந்த மலரூதி வண்டி னங்கள்
களிபாடும் வேங்கடத்தி னுச்சி யின்பால்
அடியடைந்தார்க் காம்பயனைக் கரங்க டம்மால்
அறிவிப்பீர்! திருமார்வர்! ஆடி ரூசல்.

## விபவம்—இராமகிருஷ்ண அவதாரங்கள்

பிறவாத முழுமுதலாய்த் தயர தன்றன்
பெருமைக்காம் மகனாகிப் பின்னு மண்டர்க்
குறவாகி யுகந்துகந்து நெறியைக் காட்டி
உலகுய்த்த உத்தமனே! மாலே! இன்று
நறவூறு கமலத்துள் ளலவன் நள்ளி
முகநோக்கும் வேங்கடத்தி னுச்சி யின்பால்
பிறையேறு சடையாற்கும் பிரம னுக்கும்
உயிராய திருமார்வர்! ஆடி ரூசல்.

## அருச்சை—மழுங்காத மேன்மை

மாகத்தின் தனிமுதலாய் வளரும் மேன்மை
சிறிதேனும் மழுங்காம லருச்சை தன்னின்
போகத்தை யருளாலே இனிதி னேற்றுப்
பூசகர்க்கே வசமாகும் பூர்ணர்! எல்லி
மேகத்தில் மறைமதியின் வரவை நோக்கும்
வியாளஞ்சேர் வேங்கடத்தி னுச்சியின்பால்
போகத்தில் வழுவாமற் புனைந்த மூரல்
பொங்குஞ்சீர்த் திருமார்வர்! ஆடி ரூசல்.

## அருச்சை—திருவேங்கடத்தினின்றும் மற்றைத் திருப்பதிகளுக்குப் படர்ந்தமை

பொன்னுலகின் வளனெல்லா மிகந்து வந்திப்
புவனத்தின் துயரெல்லாங் களைய வென்றே
மன்னுமிருஞ் சோலைமலை யரங்கங் கண்ண
புரமினைய வளம்பதியுட் பெருகுந் தேருல்!
துன்னுமுகிற் கணமெங்குஞ் சொரியும் முத்தால்
சுடர்வளரும் வேங்கடத்தி னுச்சி யின்பால்
மின்னுநவ மணிமகுட மோங்கி விண்பால்
வில்லோச்சத் திருமார்வர்! ஆடி ரூசல். (தொடரும்)

நனவாக்கிச் செல்கின்றுன். பின் விழித்துப் பார்க்கின்றுள் பேதை. ஏடு எழுதாமல் கிடக்கின்றது. கண்ட கனவின் இன்பத்தை எண்ணி மறு படியும் அப்படியே கண் மூடி தூங்கி விடுகிறுள். ராமா! இந்த உலகம் பொய்க் கற்பனைகளாம் வெறுமையைக் கொடுத்தாலும் உன் நினைவில் இன்பக் கனவு பல காண்பேன். கண்ட கனவு கள் நனவு ஆகாவிட்டாலும் சரி, கனவு கண்ட பொழுது கண்ட இன் பத்தை எண்ணியே காலத்தைப் போக்கி விடுவேன்.

பக்கத்தில் உள்ள நீரில்லா ஆற்றின் நடுவே குழந்தைகள் மணல் வீடு கட்டி விளையாடுகின்றன. திடீரென்று ஆற்றில் நுரையுடன் வெள்ளம் வர ஆரம்பித்துவிட்டது. பெற்றவர்கள் குழந்தைகளை அவசரமாக வந்து அழைத்தனர். விரைந்து கரை யேறிய குழந்தைகள் தாங்கள் மணல் வீடு கட்டும் பொழுது பெற்ற உவ கையினைப் போலவே இப்பொழுதும் பெற்று நீர் அலையில் மணல் வீடுகள் அழிவதையும் பார்த்து சிரித்து நிற் கின்றன. ஆற்று வெள்ளத்தில் ஒரு சுழியில்தோன்றிய நீர்க்குமிழ் மறு சுழி யில் உடைந்து தெறிக்கின்றது. எல்லா வற்றையும் அமைதியாகப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். இறைவா! உன் றன் அருள் மொழியில் இவ்வுலகில் இன்பத்திற்கும் துன்பத்திற்கும் என்ன பொருளோ தெரியவில்லையே, ஐயா!

வாடிய முகத்துடன் வானத்தைப் பார்த்து நின்ற நெல் பயிர்கள் ஆற்றி லிருந்து வாய்க்கால்களின் வழியே தண்ணீர் வந்து பாய்வதை அறிந்த வுடன் அந்தப் பேரின்பத்தில் காயாகி, கனியாக கடைசியில் அந்தத் தரையி லேயே சாய்ந்து தன் வணக்கத்தைத் தெரிவிக்கின்றன. தரையில் விழுந்து கும்பிட்டாலும் அவைகளின்வணக்கம் வானத்திற்கே உரியது. ராமா! என் றன் வாழ்வின் கதைகளையும் நினைக் கின்றேன். உன்றன் அருள் காவியத் தையும் நினைக்கின்றேன். உன்றன் கடைக்கண் பார்வையின் கருணை அழகு தெரிந்து என்றன் கதைகளை மறந்து உன்றன் காவியத்தில் கலந்து விடு கின்றேன், ஐயா!''

8 ஆம் பக்கத்தொடர்ச்சி

சந்திரனைப் போலவுள்ளது. பெருமை பொருந்திய ஔவை பிராட்டியார் நல்ல சிவபக்தராதலால், சிவபிரானின் பெயரையே தன்னுடைய நூலுக்குப் பெயர் வைத்தார். தன் குழந்தைப் படைப்பை இறைவனுக்கே அர்ப்பணம் செய்தார், நம் ஔவை.

சிவபெருமானுக்கு உகந்த மற்றொரு பூ கொன்றைப் பூ. பஞ்சாட்சர மந்திரத்திற்குப் பிரணவத்தைச் சேர்த்தால், ஆறு அக்ஷரம். அந்த ஆறு அக்ஷரமும் ஆறுதளங்கள்போல. கொன்றைப் பூவுக்கு ஆறு தளங்கள் உண்டு. அந்த ஆறு தளங்களுக்கு மத்தியில் கிரந்தத்திலே பிரணவம் எழுதினால், எப்படி இருக்கின்றதோ அதுபோல, ஆறுதளங்களோடு சேர்ந்த பிரணவம் கொன்றைப் பூப்போல உளது. கொன்றைப் பூ ஈசுவரனுக்கு மிகவும் பிரீதியான புஷ்பம். ஈசுவரன் எப்போதும் கொன்றைமலர் அணிந்துகொண்டிருப்பதை

'' மின்னார் செஞ்சடைமேல் மிளிர்க்
கொன்றை அணிந்தவனே''

எனத் தேவாரம் தெளிவுபடுத்துகின்றது.

## தெய்வ வழிபாடு:

'ஆத்தி சூடி'யிலுள்ள கடவுள் வாழ்த்து:

'' ஆத்திசூடி யமர்ந்த தேவனை
ஏத்தி யேத்தித் தொழுவோம் யாமே''

இதில் ஔவையார் வழிபடும் கடவுள், ஆத்தி மாலை சூடியவராகிய சிவபெருமானின் விருப்பத்திற்குரிய விநாயகக் கடவுள் ஆவார்.

பிராட்டியார் சிறந்த ஆத்ம ஞானி; யோக சித்தியால், உடம்பை முதுமை நோவுக்கு இரையாக்காமல் நெடுங் காலம் வாழ்ந்தார். இவ்வுண்மையைத் தன் குறளிலேயே குறிப்பிட்டிருக்கிறார் ஔவை பிராட்டியார்:

'' மாசற்ற கொள்கை மனத்தமைந்
தக்கா
லீசனைக் காட்டு முடம்பு.''

இதை விளக்குங்கால், இருதயத்தில் சுத்தமான எண்ணங்களைக் கொள்ள வேண்டும்; கபடமற்ற, பயமற்ற, குற்றமற்ற, பகைமையற்ற எண்ணங்களை நிறுத்திக் கொண்டால், தெய்வத் தன்மை, அமரத்தன்மை உண்டாவதோடு, இவை விளங்கவும் செய்யும். ஔவைப் பெருமாட்டியே நெடுங் காலம் இக்கொள்கைப்படி ஒழுகியவர்.

இராமலிங்க வள்ளற் பெருமான் ஔவையாரைத் தன் வழிகாட்டியாகக் கொண்டு, அவருடைய மொழிகளைப் பொன் மொழிகளாகப் போற்றினார்.

'' சிவாய நமவென்று சிந்தித் திருப்
போர்க்கு
அபாயம்ஒரு நாளும் இல்லை—உபாயம்
இதுவே மதியாகும் அல்லாத
வெல்லாம்
விதியே மதியாய் விடும்''

என்னும் ஔவையார் பாடலை வள்ளற் பெருமான் இடையறாது ஓதி வந்தார். தன் சீடர்களையும் பிறரையும் ஓதுமாறு வற்புறுத்தி வந்தார். 'சிவாய நமவென்று சிந்தித்திருப்பார்க்கு அபாயம் ஒரு நாளுமில்லை' என்பதைக் கடைப்பிடிக்க வேண்டும், என்று தம் சீடர்களுக்கு வள்ளலார் வரைந்த கடிதங்கள் அநேகம். வள்ளற் பெருமான், ஔவைப் பிராட்டியாரைப் பரம குருவாசக் கருதி, 'சிவாய நம' என்னும் மூலமந்திரத்தை போதிக்கும் தகுதியும் திறமையும் பெற்ற ஔவையாருக்குத் நான் சீடன் என ஒப்புக் கொண்டார். 'இம்மூல மந்திரத்தை இடைவிடாது சிந்தித்துக் கொண்டே வாருங்கள், உங்கள் பிணிகள் பறந்தோடிப் போம்' என்று அடிக்கடி கூறிக் கொண்டு வந்தார், இராமலிங்க அடிகளார். (தொடரும்)

---

## அறிவிப்பு

தி. தி. தேவஸ்தான மேலாண்மைக்குட்பட்ட கோயில்களின் புதுப்பித்தல் மற்றும் பழுது பார்த்தல் பணிகளுக்காக, தி. தி. தேவஸ்தானத்திற்கு வழங்கப்படும் நன்கொடைகளுக்கு, 1961-ஆம் ஆண்டு வருமான வரிச் சட்டம் பிரிவு 80 ஜி (2) (b)-யின்கீழ், வருமான வரி விலக்களிக்கப்படும்.

  

சமயப் பணிகளுக்கல்லாத தர்ம காரியங்களுக்குமட்டுமென தி.தி. தேவஸ்தானத்திற்கு வழங்கப்படும் நன்கொடைகளுக்கு, 1961-ஆம் ஆண்டு வருமான வரிச் சட்டம், பிரிவு 80 ஜி-யின்கீழ், 31-7-1978வரை வருமான வரி விலக்களிப்படும்.

செயலாட்சித் தலைவர்
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

# அன்னை சாரதை

செல்வி. வி. சே. ஜயலக்ஷ்மி சேதுராமன், எம்.ஏ.
திருப்பதி.

சாந்தாம் சாரத பார்வணேந்து
வதனும்
பத்மாஸனே ஸம்ஸிதாம்.
பக்த்யா பாவன ராமகிருஷ்ண
சரணும் போஜம் பஜந்தீம் சிவாம்!
ஸம்ஸாரானல தக்த பக்த ஹ்ருதயே
சஸ்வத் கிருபா வர்ஷணீம்
அம்பாம் நிஸ்துல கிர்தனீய சரிதாம்
ஸ்ரீ சாரதாம் பாவயே!!

அன்னை சாரதையாம் பெண்கள் திலகம்; சாவித்திரி, நளாயினி, அனுசூயா போன்ற தூய இதிகாச கால மாதர்களின் மறு பிறப்பு; பொறுமையின் பொக்கிஷம்; ஒழுக்கத்தின் இருப்பிடம். மேலாக பாவனர் ஸ்ரீ இராம கிருஷ்ணரின் பதமலர்தனை பக்தியுடன் பணிந்து, 'பரம ஆண்டாள்' போல குணசித்திரப் பாத்திரமாகத் திகழ்ந்தவள்.

இத்தகைய 'அன்னை' ஜயராம்பாடி எனும் சிற்றூரில் (வங்காளம்-பங்குரா மாவட்டம்) இராமசந்திரமுகர்ஜிக்கும் சியாம சுந்தரியாம் உத்தமிக்கும் 'பிள்ளைக்கலி' தீர்த்தவள். பசுமைக்கும்-ஜீவசக்திக்கும் ஆதாரமான இஷ்ட தெய்வமாம் "ஜெகதாத்திரி" மகா பூஜைக்கு இன்றளவும் நல்வழி காட்டிய தூய அன்னை. சந்திரனில் உள்ள சிற்சில களங்கங்களும் தன்னிடம் இல்லாத பெண் அணங்கை, 'தூய அன்னை'–(Holy Mother) எனக் கருதுதல் தன்மையான தொன்றே அன்றோ!... இவ்வன்னையின் இனிய சரிதாமருதத்தினை இன் தமிழில்-தூய செந்தமிழில் வடித்து எண்ணற்ற ஆஸ்திகர்கள் உள்ளம் கவர்ந்த இலக்கிய எழுத்தாளர் இரா. கணபதி எனும் சான்றோர் பல்லாண்டு வாழ்க!

ஜயராம் பாடியினின்று மூன்றே மைல்கள் தொலைவிலிருந்த காமர்புகுர் என்ற ஊரில் பிறந்த ஸ்ரீ ராமகிருஷ்ணரின் மேன்மைதங்கிய பத்தினியாம் இவ்வன்னையார் தன் கணவர் தம்மோடு எல்லோருக்கும் அன்னையாகத் தான் வாழ்ந்தாள். தூய்மையை விஞ்சியது அவள் தாய்மை தூய்மையால் பதிவிரதைகளின் திலகமானாள். அப்பதிவிரதத்தைவிடப் பெரிதாக 'புத்திர விரதம்' எனும் ஓர் அதிசயத்தையும் அநுஷ்டித்துக் காட்டினாள்.

பெருமலே பெற்ற புத்திரர்களிடம் அன்பு செய்யும் விரதத்தில் பதியின் ஆணையைக் கூடப் பணிவுடன் புறக்கணித்தாள். எடுத்துக்காட்டாக, சிஷ்யப் பிள்ளைகளுக்கு இராமகிருஷ்ணர் விதித்த உணவு விகிதாச்சாரத்தைத் தளர்த்தியது அவள் அன்னை பாசத்தைக் காட்டுகிறது. இந்த அம்சத்தில் ஸ்ரீ இராமகிருஷ்ணரினினும் சிறந்த பெண்மணியாக நின்றாள்! அவரால் பாவியரின் ஸ்பரிசத்தை தாங்க முடியாது. அன்னை சாரதைக்கோ பாவி-புண்ணியசாலி என்ற பேதமே கிடையாதாம். குற்ற நீரைக் களைந்து குணமாகிய பாலை அருந்துவதில் சாரதா ஹம்ஸம். பரம ஹம்ஸ இராமகிருஷ்ணரைவிடப் பெரியவள் அன்னை. காரணம் எல்லாருக்கும்

## அறிவிப்பு

திருமலையில் காட்டேஜுகளுக்காக முன்பணம் செலுத்தி, தனி ஒதுக்கீடு (Reservation) செய்து கொள்ளும் யாத்திரிகர்களின் நன்மைக்காக, மேலாண்மை கீழ்வரும் சலுகைகளை அளித்துள்ளது.

1. காட்டேஜுகளுக்காக தனி ஒதுக்கீடு செய்து கொண்ட தேதிகளுக்குள் சம்பந்தப்பட்ட யாத்திரிகர்கள் நாட்கழித்து வந்தாலும், மீதம் இருக்கும் நாட்களுக்கு, அவர்கள் கணக்கில், வராத நாட்களுக்குரிய கட்டணத்தைப் பிடித்துக் கொண்டு, மீதித் தொகைக்கு அவர்களுக்கு இட வசதி அளிக்கப்படும்.

2. காட்டேஜுகளுக்காக முன் பணம் அனுப்பியவர்கள், தாங்கள் கோரியபடி தங்கள் பெயரில் ஒதுக்கீடு செய்யப்பட்ட நாட்களை, சூழ்நிலைக் காரணமாக மாற்றிக் கொள்ள நினைத்தால், அவர்கள் இரண்டு நாட்களுக்கு முன்பேயே, (அதாவது ஒதுக்கீடு செய்யப்பட்ட தேதிக்கு முன் இரண்டு நாட்கள்) இது சம்பந்தமாக விண்ணப்பித்துக் கொள்ள வேண்டும்.

3. காட்டேஜுகளுக்காக முன் பணம் செலுத்தியவர்கள் தங்களுக்கு வழங்கப்பட்ட தனி ஒதுக்கீடு தேதிகளில் வர இயலாது, செலுத்திய தொகையைத் திருப்பிப் பெற வேண்டுபவர்கள், தங்கள் எண்ணத்தை, ஒதுக்கீடு செய்யப்பட்ட தேதிக்கு இரண்டு நாட்களுக்கு முன்பேயே, விண்ணப்பம் ஒன்றன் மூலமாக தெரிவித்தல் வேண்டும்.

செயலாட்சித் தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

தன்னை அம்மாவாக்கிக் கொண்டது தான் என நமக்கு அறிவுறுத்துகிறார் ரா. கணபதியார்.

தாயன்பினாலேயே அன்னை சாரதையின் சரிதத்தில் சோதனைகளும், சோக நிகழ்ச்சிகளும் ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றின. ஆனால் சோதனைகளைச் சாதனைகளாகவும், சோகத்தைச் சுகமாகவும் ஆக்கிக் கொண்டு கிருஷ்ணப் பிரேமியாம் 'சக்குபாயி' போன்று திகழ்ந்தாள் இவ் அன்னை.

இன்றைய உலகு மின் மினிப் பூச்சிகளின் மினு மினுப்பையுடையது. மின் விளக்குகள் அலங்காரப் பூங்காவிலிருந்து அடுக்கடுக்காக இலட்ச தீபம் ஏற்றிய ஆலய சந்நிதிகளுக்குள் போகிற உணர்வில் எப்பேற்பட்ட நிம்மதி கிடைக்கும்! அந்த நிம்மதி ரசிகர்களாகிய நமக்கு சாரதையின் தமிழ் சரிதத்தில் கிடைக்கிறது. எளிமை நிறைந்த மாது என்பதால் குண விசேஷங்களில் குறைந்த அன்னை என நினைத்துவிடல் தவறாகும். இதற்கு எடுத்துக்காட்டாக, "தண்ணீரைக் காட்டிலும் ஓர் அணு அதிகமாகப் பிராண வாயு அடர்ந்திருப்பது ஹைட்ரஜன்-பெர்-ஆக்ஸைட். சீசாவினுள் அதைப் பார்த்தால் தண்ணீரைப் போலவே தெளிவாக எளிமையான பண்டமாகத்தான் தோன்றும். உண்மையிலேயே நீரைவிட அதன் சக்தி பெரிது. அழுக்குகளை ஒரு நொடியில் கரைத் தகற்றிவிடும். சீசாவில் மூடியிட்டு அதனைக் காப்பாற்றியாக வேண்டும். கொஞ்சம் திறந்தாலும். அதிகப்படி பிராணவாயு போய்விடும். சாரதையின் நல் சரிதத்தை மனதில் பொதிந்து வைத்துக் கொண்டாலோ, அதன் எளிமையினது அடர்த்தி போய்விடும்." என்று நமக்கு விஞ்ஞான ரீதியாக ஞான மார்க்கத்தைத் தெளிவுபடுத்துகின்றார் கணபதி அவர்கள்.

ஆதிகால அவதாரங்கள் மிக்க சக்தியுடன் செயலாற்றின. அப்போதெல்லாம், மக்களின் ஒரு பகுதியினரே அதர்மத்தில் ஈடுபட்டனர். பக்தர்கள் தாமே அதர்மம் நீங்க மனமுருகிப் பிரார்த்திப்பார்கள்! அவதாரமும் உடன் திகழும். தர்ம ஸம்ஸ்தாபனன் யுகந்தோறும் தோற்றம் கொள்வான். அதர்மம் சர்வ... பகமாகி விட்டாலும் அவதாரத்தின் சக்தி கொந்தளித்துப் போவதில்லை. மூளையின் சிறப்புக்குப் பெயரெடுத்த இந்தக் காலத்தில், பராசக்தி நம்மை கேலி செய்வது போல தன்னை ஒடுக்கிக் கொண்டு அவதரிக்கிறாள். நுண்ணிய மனித மூளையும் அந்த நுண்ணிய அவதாரத்தைப் பெருமளவு புரிந்து கொள்ளத் தவறிவிடுகிறது. தருமத்தையேனும் நிலைபடுத்தி அடியோடு போகாது ஓரளவு காத்து அதன் நினைவையேனும் மீண்டும் ஏற்படுத்திய திருப்தியோடு அவதார வியக்தியும் பெருமையுடன் மறைந்து விடுகிறது. சாரதாமணி மறைந்து அரை நூற்றாண்டுக்கு மேலாகிவிட்டது. தனது 64-ஆம் வயதில் ஆவி துறந்தாள் இவ்வன்னை. இவள் சகாப்தம் முடிவதற்குள் புதியதொரு அவதாரம் இறைவன் எடுக்கின்ற நேரமும் வந்துவிட்டது!... இக்காலத்தில் பரமஹம்ஸரின் பத்தினியாகிய சாரதாமணியம்மையாரின் சரிதை தனை ஒவ்வொருவரும் கருத்தில் வைப்போமாக. ★

## வேங்கட மணியே - மாதவ மணியே

**தணிகை சம்பத்து கிருஷ்ணன்.**

காவியம் போற்றிடும் கலைமணி நீயே!
கருத்தில் இனித்திடும் கருமணி நீயே!
ஓவியம் சாந்திடும் உறுமணி நீயே!
ஒப்புயர் இல்லாத வேங்கடமணியே.

தேவையும் நல்கிடும் தெய்வமணி நீயே!
தென்றலாய் வீசிடும் இன்பமணி நீயே!
இறையினை யளித்திடும் இறைமணி நீயே!
இன்பமாய் தோன்றிடும் வேங்கட மணியே.

மாசினை மாய்த்திடும் மறைமணி நீயே!
மங்கையர் போற்றிடும் திருமணி நீயே!
மாவினை காய்ச்சிடும் ஒளிமணி நீயே;
மங்கலம் நல்கிடும் வேங்கடமணி நீயே!

அமரரும் போற்றிடும் அருமணி நீயே!
அறுசுவை யளித்திடும் அருள்மணி நீயே!
அடியாரும் பாடிடும் ஆதிமணி நீயே!
அழகாய் தோன்றிடும் வேங்கடமணியே!

பாவையர் பாடிடும் பன்மணி நீயே!
நாவலர் நவிந்திடும் நன்மணி நீயே!
பூவையர் போற்றிடும் பொன்மணி நீயே!
புகழுடன் மிளிர்ந்திடும் வேங்கடமணியே.

குறையும் தீர்த்திடும் குருமணி நீயே!
குரவையர் ஆற்றிடும் குன்றுமணி நீயே!
மறைகளும் போற்றிடும் வேங்கட மணியே!
மற்றவர் துதித்திடும் மாதவமணியே.

தொடர் கட்டுரை :

# முக்கவி கண்ட காப்பியம்

## " சுந்தர காண்டம் "

திரு. டி. ஜி. அனந்த சுப்ரமண்யம்,
(காபேயன்)
திருப்பதி.

கம்பர் ஊர் தேடு படலத்தில் இலங்கையைப் பற்றி மிக விரிவாக வர்ணித்துள்ளார். ஆனுல் வால்மீகி மேலெழுந்த வாரியாக வர்ணிக்கிருர். ஹநுமான் தன் உடம்பைச் சுருக்கிக் கொண்டதையும், சூரியன் அஸ்தமனத்தையும் வர்ணிக்கிருர் கம்பர்.

" என்றனன், இலங்கை நோக்கி, இனை
யன பலவும் எண்ணி
நின்றவாள்அரக்கர் வந்து நேரினும்
நேர்வர் என்னுத்
தன் தகை அனைய மேனி சுருக்கி
அச்சரளச் சாரல்
குன்றிடை இருந்தான்; வெய்யோன்
குரைகடல் குளிப்பதானுன் "

பலவாருக நினைத்த ஹநுமான் இனி இரவு வரப்போவதால் நிசாசரராகிய அரக்கர்கள் இங்கும் வருதல் கூடும். ஆகையால் அவர்கள் அறியாதிருக்குமாறு தன்னுடலைச் சுருக்கிக் கொண்டான். ஆதவனும் தன் கிரணங்களைச் சுருக்கிக் கொண்டு மறைந்தான். 'रात्रौ वेक्ष्यामि सूक्ष्मोऽहं लंकां रावणपालिताम् ।' என்று அத்யாத்ம ராமாயணம் கூறுகிறது.

துளசிதாஸர் கீழ்வருமாறு கூறுகிருர்:

'अति लघु रूप धरेउ हनुमाना ।
पैठा नगर सुमिरि भगवाना ॥

முதலில் இலங்கையின் அதிதேவதைக்கும் - ஹநுமானுக்கும் நடந்த விஷயத்தைக் கூறிய பிறகு ஹநுமான் சிறிய உருவத்தை எடுத்துக் கொண்டாரென்று.

இரவில் இலங்கைக்குள் பிரவேசித்தார் ஹநுமான் என்று வால்மீகி கூறுகிருர். இராவணனுல் ஆளப்படும் அந்நகரத்தின் சிறப்பையும், காவல் முதலானவற்றையும் பார்த்து ஆச்சர்யமடைந்து மகிழ்ந்தார். இரவில் அந்நகரத்தை நுழைய முயற்சிக்கும்போது அந்நகரத்தைக் காவல் காத்து வரும் அதிதேவதை ஹநுமானைத் தடுத்து நிறுத்தியது.

அத்தேவதை தன் உண்மையான உருவத்தை எடுத்துக் கொண்டு ஹநுமானைப் பார்த்து. "நீ யார்? எங்கே வந்தாய்? இந்த இலங்கைக்குள் சுலபமாக பிரவேசிக்க முடியாது." என்று அதட்டியது.

ஹநுமான் சென்றதை கம்பர் அழகாக வர்ணிக்கிருர். இலங்கையில் சந்திரனனின் ஒளி வீசிக் கொண்டு இருக்கிறது. அவ்வொளியையும், ஹநுமானின் செய்கையையும் சேர்த்து வர்ணிக்கிருர்.

" இகழ்வு அரும்பெரும் குணத்து
இராமன் எய்தது ஓர்
பகழியின் செலவுஎன, அநுமன்
பற்றினுல்
அகழ் புகுந்து, அரண் புகுந்து,
இலங்கை ஆங்கு அவன்
புகழ் புகுந்து உலாயது ஓர் பொலிவும்
போன்றதே."

வெண்மையான நிலா அவ் இலங்கை முழுவதும் பரவி விளங்கிய தோற்றமானது இராம தூதனுன ஹநுமான் அந்த இராமபாணம்போல் தடையின்றி விரைவாக இலங்கையை அழிக்குமாறு அதிற்சென்று சேர, அது மூலமாக அந்த இராமபிரானது கீர்த்தி அந்நகரம் முழுவதும் பரவி விளங்கினுற்போல் இருந்தது என்று.

ஹநுமான் நேர்வழியாகச் சென்ருர் என்று வால்மீகி கூறுகிருர். கம்பர் அவ்விதம் கூறவில்லை. ஹநுமான் மதிலைக் கடந்து சென்ருர் என்றும், அப்பொழுது இலங்கையின் அதிதேவதை ஹநுமனைத் தடுத்து நிறுத்தியது என்றும் கூறுகிருர். எல்லாவிடத்திலும் அரக்கர் சுற்றிக் கொண்டிருப்பதைக் கண்ட ஹநுமான் குறுக்கு வழி கண்டு பிடித்தார்.

" அவ்வழி, அவ்இருள் பரந்த ஆயிடை
எவ்வழி மருங்கினும் அரக்கர் ஏகினுர்
செவ்அழி மந்திரத் திசையராயினும்
வெவ்வழி இருள்தர மதித்து மீச்
செல்வார்"

அரக்கர்கள் மந்திர சித்தியால் நினைத்த இடத்திற்குச் செல்லவல்ல ஆற்றல் உடையவர்கள் ஆதலால், இருளில் அவர்கள் செல்லுவதும், போவதும் சரியாகக் காணமுடியாது. ஆகையால் அவர்கள் இருளோடு இருளாக இருப்பார்கள் என்பது அறியத் தக்கது. ஆகையால் ஹநுமான் மதில்வழியாகச் செல்லமுற்பட்டார் என்று கூறுகிருர். மேலும் ஒரு மாற்றம். முதலிலேயே இலங்காதேவியுடன் ஹநுமான் யுத்தம் செய்து பிறகு வேறு வழியாகச் சென்ருர் என்று வால்மீகம் கூறுகிறது. கம்பரோ வெனில் முதலிலேயே அவ் விபரத்தைக் கூறிவிடுகிருர்.

" வாயில் வழிசேறல் அரிது; அன்றியும்
வலத்தோர்
ஆயில் அவர்வைத்த வழிஏகல் அழகு
அன்ருல்
காய் கதிர் இயக்கு இல் மதிலைக் கடிது
தாவிப்
போய் இ நகர் புக்கிடுவேன் என்று ஓர்
அயல் போனுன்."

என்று கம்பர் கூறுகிருர்.

அத்யாத்ம ராமாயணம் ஹநுமான் மிகவும் சிறிய உருவத்துடன் நுழைந்தாரென்று கூறுகிறது.

'धृत्वा सूक्ष्मं वपुर्द्वारं प्रविवेश प्रतापवान्'

'सूक्ष्मं' என்று கூறுவதை வால்மீகி அழகாகக் கூறுகிருர்.

**पृषदंशकमात्रस्सन् बभूवाद्भुतदर्शन :**

"पृषदंशक" என்று சொன்னுல் "பூனைக் குட்டி' என்று பொருள் கொள்ளலாம். மேலும்ஹநுமான் பார்ப்பதற்கு மிகவும் விநோதமாகவும் காணப்பட்டார்.

(தொடரும்)

# செய்திச் சுருக்கம்

## உந்து பந்தாட்டப் போட்டி

திருப்பதியில் 23–1–78 முதல் 26–1–78 வரை தி.தி. தேவஸ்தானத்தின் ஆதரவில் முதல் உந்துபந்தாட்டப் போட்டி ஒன்று ஸ்ரீ வேங்கடேஸ்வரா கலைக் கல்லூரி விளையாட்டுத் திடலில் நடைபெற்றது. இதையொட்டி 23–1–78 அன்று காலை ஏற்பாடு செய்யப்பட்ட போட்டியின் திறப்பு விழாவிற்கு தி. தி. தேவஸ்தானத்தின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா கலைக் கல்லூரி முதல்வர் திரு. பி. ராமசுப்பா ரெட்டி அவர்கள் தலைமை தாங்கினர். திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வரா மருத்துவக் கல்லூரியின் கண் மருத்துவத் துறையின் பேராசிரியர் டாக்டர் ஆர். முஸலப்பரெட்டி, எம். எஸ். அவர்கள் விழாவில் பங்கேற்று, போட்டியினைத் துவக்கி வைத்தார்.

ஆந்திர, தமிழ்நாடு மாநிலங்களைச் சார்ந்த 14 அணிகள் இப்போட்டியில் பங்கேற்றன. இதல் தி. தி. தேவஸ்தான அணியும் ஒன்று.

26–1–78 அன்று நடைபெற்ற இறுதிப் போட்டியில் ஹைதராபாத்தைச் சார்ந்த மேயர்ஸ் அணி, ஹைதராபாத் ஆர். எஸ். சி. பி. அணியைத் தோற்கடித்தது.

தி. தி. தேவஸ்தான விளையாட்டுக் குழுவின் அமைப்பாளரும், தி. தி. தேவஸ்தான ஊழியர் நல அலுவலருமான திரு. ராமகிருஷ்ணய்யா அவர்கள், 26–1–78 அன்று இரவு 8 மணி அளவில் ஏற்பாடு செய்யப்பட்ட பரிசளிப்பு விழாவிற்கு வருகை புரிந்தோரை வரவேற்றார். விழாவிற்குத் தலைமைவகித்த தி. தி. தேவஸ்தான உதவி செயலாட்சித் தலைவர் திரு. வை. வெங்கடப்பய்யா அவர்களின் தலைமை உரையைத் தொடர்ந்து, திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வரா ராம் நாராயண் ரூயா மருத்துவ மனையின் கண்காணிப்பாளர் டாக்டர். டி. சீனுவாசராவ் எம். எஸ். அவர்கள் போட்டியில் வெற்றி பெற்ற அணியினர்க்குத் தேவஸ்தான கழற்கோப்பையை வழங்கினர். பின்னர், அவ்வணியைச் சார்ந்த விளையாட்டு வீரர்களுக்கும், ஈற்றயற் போட்டி வரை வெற்றி பெற்ற அணியினர்க்கும் வெள்ளிப் பதக்கங்கள் வழங்கினர்.

திரு. சி. கே. ஜெயராமகிருஷ்ணன் அவர்கள் நன்றி நவின்றார்.

## பொங்கல் விழா

ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறையின் சார்பில் திங்கள்தோறும் சிறப்புக் கூட்டம் ஒன்று நடைபெற்று வருகின்றது. இவ்வகையில், 31-1-78 அன்று மாலை 5 மணி அளவில், கல்லூரியின் கலைப் பிரிவு, கட்டிடத்தில் நடைப்பெற்ற ஜனவரித் திங்கள்சிறப்புக் கூட்டம் பொங்கல் திருநாளையும், வள்ளுவர் நாளையும் இணைத்துக் கொண்டாடும் விழாவாகத் திகழ்ந்தது. இறை வணக்கப் பாடலுடன் இனிதே துவங்கிய விழாவிற்கு வருகை புரிந்தோரை மாணவர் தலைவர் திரு என். கிருபானந்தன் வரவேற்றார். ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக்கழகக் கல்லூரியின் முதல்வர் பேராசிரியர் இ. ஆர். ஸ்ரீ. கிருஷ்ணசர்மா அவர்கள் விழாவிற்குத் தலைமை வகித்து உரையாற்றுகையில் தமிழ் இலக்கியச் சிறப்பினை விளக்கிப் பேசினர். பின்னர் தமிழ்த் துறைத் தலைவர் டாக்டர் கு. தாமோதரன் அவர்கள் 'பொங்கல் விழாவின் சிறப்பியல்பு' எனும் தலைப்பில் சொற்பொழிவு ஆற்றுகையில், உழைப்பின் பெருமையை நினைவுபடுத்தும் வகையில் கொண்டாடப்பெறும் தேசியவிழாவான பொங்கல் விழாவைப்பற்றிப் பலவாறு விளக்கிக் கூறி அவ்வுழைப்பின் அவசியத்தை வள்ளுவர் எவ்வாறு தன் பாக்களில் சிறப்பாக காட்டுகின்றார் என்பதையும் விளக்கிக் கூறினர். அடுத்துப் பேசிய, சென்னை உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தைச் சார்ந்த 'திருக்குறள் மணி' பேராசிரியர் க. த. திருநாவுக்கரசு அவர்கள் 'வள்ளுவம்' எனும் தலைப்பில், பொங்கல் விழாவையும், வள்ளுவர் நாளையும் இணைத்துக் கொண்டாடுவதின் நோக்கத்தைப் பற்றிப் பேசுகையில், பொங்கல் விழாவில் போற்றப்படும் கதிரவன், மகளிர், உழவர் ஆகியோரின் சிறப்பியல்புகளைப் பற்றி வள்ளுவரும் பெரிதும் போற்றுகின்றார். ஆகையால் இரண்டையும் இணைத்துக் கொண்டாடுவது சாலப் பொருத்தமே என்று குறிப்பிட்டார். மேலும் தம் உரையில் பொங்கல் விழாவின் பழமையைப் பற்றிக் குறிப்பிடும்போது இவ்விழா இராஜராஜ சோழன் காலத்திலிருந்தே சங்கராந்தித் திருநாள் எனும் பெயரில் கொண்டாடப்பட்டதுஎன்பது சில கல்வெட்டுச் சான்றுகளின்மூலம் தெரிய வருகின்றது என்றும், போர்ச்சுகீசிய எழுத்தாளர் ஒருவர் தம் நூலில், 15ம் நூற்றாண்டில் மதுரையில்நடந்த பொங்கல் விழாவைப்பற்றிய முழுச் செய்திகளைச் சுமார் 22 பக்கங்களில் விவரித்து எழுதியதையும் குறிப்பிட்டார். தொடர்ந்து பேசுகையில் மனித இனம் மாண்பு பெற வாழ்க்கைக்கு இன்றியமையாத அறக் கொள்கைகளைப் பற்றி வள்ளுவர் கூறிய கருத்துக்களை விளக்கிப் புதிய சமுதாய மறுமலர்ச்சிக்கு வித்தூன்றியவா வள்ளுவர் என்றும் கூறினர்.

பிறகு செல்வி. ஜெயராம் கௌரி மலேசியாவில் கொண்டாடப்பெறும் பொங்கல் விழாவைப்பற்றிப் பேசியதைத் தொடர்ந்து, தமிழ்த் துறை ஆராய்ச்சி மாணவரான திரு. தி. செல்வம் 'பொங்கல்' எனும் தலைப்பில் தான் புனைந்த கவிதையை வாசித்தார். இறுதியில் மாணவர் செயலர் செல்வி. வசந்தா நன்றி நவின்றார். இவ்விழாவில் ஓய்வுபெற்ற, ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக்கழகக்கல்லூரியின் வடமொழிப் பேராசிரியர் டாக்டர் வி. வரதாச்சாரி அவர்களும் கலந்து கொண்டார். 

(தொடர் கட்டுரை)

# சொல்லின் செல்வன் - சொல்

டாக்டர் பொன். சௌரிராஜன், M.A., Dip. Lin., Ph.D., திருப்பதி.

"யார் கொல் இச்சொல்லின் செல்வன்" என்று இராமபிரானது வியப்புக்கும் பாராட்டுக்கும் எடுத்த எடுப்பிலேயே உரியவனாகும் சிறப்பு அனுமனுக்கே வாய்க்கிறது. இராமபிரான் அளித்த அந்தப் பட்டம் அவன் அந்நாள் வரை கற்ற கல்வியின் தகுதியை உலகுக்குக் காட்டவல்லதும் ஆகும்.

பட்டம் (Degree) ஒன்றன் சிறப்பு, பட்டத்தை அளிப்போரின் சிறப்பைப் பொறுத்தது. 'சொல்லின் செல்வன்' என்று இன்னொருவனுக்குப் பட்டம் அளித்த இராமபிரானின் சொல் தகைமையும் இங்குச் சிந்தித்தற்கு உரியது. அப்போதே அனுமன் பெற்ற பட்டமும் சிறப்புடையது, உண்மை உடையது ஆகும். அனுமனுக்குச் சொற் செல்வன் என்று பட்டம் வழங்கும் இராமபிரானைச் சொல்லின் வல்லவனாகவும், வள்ளலாகவும் கம்பர் படைத்துக் காட்டும் பாங்கு கற்பதற்கு உரியது.

'ஆழிசூழ் உலகமெலாம் பரதனே ஆள்தல் வேண்டும், நீ தாழிருஞ் சடையொடு தவமேற்கொண்டு காடேகி, ஆங்கே பதினான்கு ஆண்டுகள் கழித்தல் வேண்டும்' என்பது மன்னன் கட்டளை என இராமன் முன் கைகேயி கூறிய போது இராமன் சொல்லும் விடையில் அவன் சொல்வன்மை புலப்படுகின்றது.

> ' மன்னவன் பணியன்றாகில் நும்பணி
> மறுப்பெ னோவென்
> பின்னவன் பெற்ற செல்வம் அடிய
> னேன் பெற்ற தன்றோ ?'

என்பது இராமபிரான் கைகேயிக்குக் கூறியவிடை.

'தாயே! தங்கள் கட்டளையை யான் என்றேனும் மீறியது உண்டா? தாங்கள் இட்டால் என்ன, தந்தை இட்டால் என்ன. இரண்டும் எனக்கு ஒன்றே. மேலும் இராச்சியத்தை யாருக்குத் தரப்போகிறீர்கள். என் தம்பி பரதனுக்கே அன்றோ? அவன் இன்பம், என் இன்பம் என்பது தாங்கள் அறியாததா?' என்பது இயல்பான பொருள். மேலெழுந்தவாரியாகத் தோன்றும் பொருள். ஆனால் ஆழ்ந்து நோக்கும்போது இத்தொடர்கள் வேறு பொருளைத் தருவதையும் காணலாம்.

'தாயே! அரசன் கட்டளை அன்று இது. இது தாங்களே இடுவது என்றாலும் ஏற்றுக் கொள்கின்றேன். ஆனால் ஒன்று. தங்களுக்கு விளங்காததொன்று. அதனை விளக்கிக் கூறுவது என் கடமை. தாங்கள் கருதுவது போல பரதன் இராச்சியம் ஏற்கமாட்டான். தங்களைவிட அவனை நான் நன்கு அறிவேன். அவன் என்பால் கொண்டுள்ள அன்பை அறிவேன். இப்போது தங்களிடம் யான் பெற்றுள்ள இத்தவச் செல்வம் இருக்கிறதே அதுவே அவன் பெறுவான் என்பதை யான் அறிவேன்'. இவ்வாறு வேறொரு பொருளும் பயந்து இராமனின் சொல் வன்மையைக் காட்டுகின்றது.

குகப் படலத்தில் அரசிழந்து கங்கைக் கரையில் தங்கியிருந்த இராமனைச் சென்று வணங்கிய குகன் 'தேனும் மீனும் அமுதினுக்கு அமைவதாத் திருத்தினென் கொணர்ந்தேன்; என் கொல் திருவுளம்?' என்று இராமபிரான் முன் படைத்து ஏக்கத்தோடு காத்து நிற்கின்றான். சுற்றியுள்ள தபோதனர் தேனையும் மீனையும் பார்த்து வெறுப்பொடு முகம் சுளிக்கின்றனர். உண்டால் தபோதனர் வருந்துவர். உண்ணாவிடின் அன்பன் குகன் வருந்துவன். அப்போது இராமன் பின்வருமாறு கூறுகின்றான். அவன் கூற்றில் அமைந்துள்ள சொல் விநயம் சிந்தித்து மகிழத்தக்கது.

'உள்ளத்தில் உண்மையான அன்போடு கொணர்ந்த பொருள் எதுவாயினும் அது அமிழ்தத்தினும் சிறந்தது குகனே! அவையே பவித்திரம். எம்மனோர்க்கு உரியன. கண்டபோதே உண்டதுபோல நிறைவுற்றேன்' என்று கூறி இரு பகுதியினரையும் தன் சொல் திறத்தால் மகிழ்வுறுத்தினன்.

இத்தகு திறனெல்லாம் அமைந்து விளங்குவதாலேயே இராமபிரானை, "தென் சொல் கடந்தான் வட சொல் கலைக்கு எல்லை தேர்ந்தான்" என்று கம்ப நாட்டாழ்வாரும் குறிப்பாராயினர்.

இவ்வாறு எல்லாத் தகுதியும் வாய்ந்த ஒருவரால், இராமபிரானால் 'சொல்லின் செல்வன்' என்ற பட்டம் பெற்ற அனுமன் அப்பட்டத்துக்கு உரிய தகுதியாகக் கொண்டு விளங்கிய சொல் திறத்தை கம்பர் பலவாறு காட்டிச் செல்கின்றார். அனுமனது சோர்வற்ற சொல்திறத்தை, திறனறிந்து கூறும் இயல்பை, சில சொல்லும் சீர்மையை, வேட்பச் சொல்லும் வித்தகத்தை, வெல்லுஞ் சொல் இன்றிச் சொல்லும் வீரத்தை, நிரந்தினிது சொல்லும் நெறியைக் கம்பர் தம் காவியக் காட்சிகளில் அழகாகப் பாடிச் செல்கின்றார். அடுத்த கட்டுரையில் அவற்றையெல்லாம் காணலாம்.

அடுத்த இதழில் முடிவுறும்)

---

**ஸ்ரீ தாள்ளபாக்க அன்னமாச்சார்யாவின் 30-வது வருடாந்திர விழா 4-4-78 அன்று திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்யா கலாமந்திரத்தில் மாலை 6 மணி அளவில் நடைபெறும். இதனைத் தொடர்ந்து ஸ்ரீ வேங்கடேஸ்வரா, அன்னமாச்சார்யா, தியாகராஜா இசை விழா 5-4-78 முதல் 9-4-78 வரை மேற்குறிப்பிட்ட கலாமந்திரத்தில் நடைபெறும்.**

---

# ராசி பலன் (1-3-78 முதல் 31-3-78 வரை)

டாக்டர் டி. அர்க்கசோமயாஜி, M.A., Ph.D.
திருப்பதி.



## மேஷம்:

*[அசுவனி பரணி, கார்த்திகை முதல் பாதம் முடிய]*

மாதத்தின் முதல் 15 நாட்களின்போது சூரியனால் உடல்நலமேன்மை, வெற்றி நன்மதிப்பு ஆனால் இறுதி 15 நாட்களின் போது அதிக செலவினங்கள் ஏற்படல்; புதனால் வழக்குகள் சம்பந்தப்பட்ட செலவுகள், உடல்நலமின்மை, இகழ்ச்சிக்குள்ளாதல், சனியினால் சச்சரவுகள் ஏற்படல், பொருள் நஷ்டம், தன் பிள்ளைகள் பெண்களைப் பற்றிய கவலைக்குள்ளாதல். பிரயாணங்களுக்கு குரு அனுகூலமில்லை. ராகுவினால் பணவரவு, ஆனால் செவ்வாயினால் உடல் நலம் கெடல், தீய நண்பர்களால் கெடுதி ஏற்படல்; மாதத்தின் இறுதி மூன்று நாட்களின் போது சுக்ரனால் மனமகிழ்ச்சி ஏற்படல்.



## ரிஷபம்:

*[கார்த்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் முடிய]*

சூரியனால் உடல்நல மேன்மை, வெற்றி, மதிப்புயர்தல்: புதனால் பணவரவு, வாகனங்கள் வாங்கப் பெறல், புதிய நட்புறவுகள், மனமகிழ்ச்சி, செவ்வாயினாலும் குருவினாலும் பணவரவு, ஆனால் சனியினாலும் ராகுவினாலும் சில மனக்கஷ்டங்களும், உற்றார் உறவினருடன் கருத்து வேறுபாடுகளும்.



## மிதுனம்:

*[மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய].*

மாதத்தின் முதல் 15 நாட்களில் சூரியனால் உடல் நலம் கெடல், அதிக செலவினங்கள், எதிர்பார்ப்புக்களில் பெருத்த ஏமாற்றம், இறுதி 15 நாட்களின் போது வெற்றி, புதனால் பணவரவு, எதிரிகளை வெற்றி கொளல், மக்கட்பேறு, மகிழ்ச்சி, நல்ல நண்பர்கள், 27-ஆம் தேதி வரை சுக்ரனால் நன்மை ஏதும் இல்லை. இவ்ராசியினால் குடும்பத்தில் சச்சரவுகளும், தான் இகழ்ச்சிக்குள்ளாதலும் நடைபெறும். குருவும், ராகுவும் மேற்கூறிய சூழ்நிலையையே ஏற்படுத்தும். செவ்வாயினால் உடல் நலம் கெடுதல். அலுவலகக் கவலைகள், எதிரிகள் ஏற்படல், வீட்டில் திருட்டு, ஆனால் சனியினால் நல்ல தேக ஆரோக்கியம், பணவரவு, புதிய வீட்டுச் சாமான்கள் அல்லது வாகனங்கள் வாங்குதல், வெற்றி.



## கடகம்:

*[புனர் பூசம் 4-ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய]*

சூரியனால் இம்மாதம் முழுவதும் உடல் நலம் பாதிக்கப்படல், பொருள் வறட்சி, ஏமாற்றங்கள், சனியினால் கூட கவலைகளும், பொருள் நஷ்டமும் ஏற்படல், ராகுவினால் பொருள்வரவு, சுக்ரனால் மனமகிழ்ச்சி, புதிய ஆடை ஆபரணங்கள் வாங்குதல், பொருள் லாபம், சமய நிகழ்ச்சிகளில் பங்கேற்றல், புதனால் மாதத்தின் முதல் 15 நாட்களில் மேற்கொள்ளும் பணிகளுக்கு இடையூறுகள் ஏற்படல், ஆனால் இறுதி 15 நாட்களின் போது வெற்றியும் பொருள் வரவும், குருவினால் பிரயாணமும் அதனால் உடல் நலம் கெடுதலும்.



## சிம்மம்:

*[மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய].*

செவ்வாயினால் பொருள் வறட்சி, மனைவிக்கு மனயமைதியின்மை, கண் சம்பந்தப்பட்ட நோய்கள் ஏற்படல், சனியினால் தன் பிள்ளைகளுடன் முரண்பாடு கொளல், உற்றார் உறவினருடன் பிரிவு ஏற்படல், பொருள் நஷ்டம், பிரயாணமும் அதனால் உடல்நலம் கெடுதலும், ராகுவினால் பொருள் நஷ்டம் ஏற்படல், குருவினால் பணவரவும், நன் மதிப்புயர்தலும், சுக்ரனால் புதிய வீடும், புதிய ஆடை ஆபரணங்களும் வாங்கப்பெறல். புதனால் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது பணவரவு, புதியன வாங்குதல், பதவி உயர்வு, மக்கட் பேறு அல்லது தன் பிள்ளைகளுக்கும் பெண்களுக்கும் மேன்மை உண்டாதல். ஆனால் இறுதி 15 நாட்களின்போது இடையூறுகள் ஏற்படல், சூரியனால் முதல் 15 நாட்களில் பிரயாணம் மேற்கொளல், வயிறு சம்பந்தப்பட்ட நோய்களினால் அவதிப்படல், இறுதி 15 நாட்களின் போது உடல் நலம் கெடலும், மனைவிக்கு மனயமைதி கெடுதலும்.



## கன்னி:

*[உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய].*

சனியினாலும் ராகுவினாலும் துன்பங்கள் ஏற்பட்டாலும் செவ்வாயினால் அவை தீர்க்கப்பட்டு வெற்றியும் மகிழ்ச்சியும் ஏற்படல், குருவினால் பண நஷ்டம், பதவி நிலை பாதிக்கப்படல், சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களுக்கு நன்மை, உடல்நல மேன்மை, வெற்றி ஆனால் இறுதி 15 நாட்களின்போது பிரயாணமும், வயிறு சம்பந்தப்பட்ட நோய்களுக்குள்ளாதலும், சுக்ரனால் பெண்களின் மூலம் கவலைகள், முதல் 15 நாட்களின் போது குடும்பத்தில் சச்சரவுகள், ஆனால் இறுதி 15 நாட்களின் போது வெற்றி, புதியன வாங்குதல், மக்கட் பேறு பணவரவு அல்லது தன் மக்களுக்கு நன்மை.



## துலா:

*[சித்திரை 3-ம் பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம்முடிய]*

புதனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது வெற்றி, பதவி உயர்வு ஆனுல் இறுதி 15 நாட்களின் போது எதிரிகள் ஏற்படல், சுக்ரனுல் பெண்களின் மூலம் துன்பங்கள் ஏற்படல், செவ்வாயும் சனியும் நன்மை செய்வதால் லாபம், வெற்றி, நல்ல நண்பர்கள், புதியன வாங்கப் பெறல், குருவினுல் வெற்றி, பணவரவு, தானிய வகைகள் கிடைக்கப் பெறல், ராகுவினுல் வெற்றி, பண வரவு, தானிய வகைகள் கிடைக்கப் பெறல், ராகுவினுல் அவசியமற்ற செலவினங்கள், சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது எதிரிகளால் தொல்லைகள் அல்லது உடல்நலம் கெடல் ஆனுல் இறுதி 15 நாட்களில் எதிரிகளைவெற்றி கொளல், உடல் நல மேன்மை.



**விருச்சிகம் :**

[விசாகம் 4-ம் பாதம் முதல், அனுஷம் கேட்டை முடிய]

சனியினுலும் செவ்வாயினுலும் பண நஷ்டம், இகழ்ச்சிக்குள்ளாதல், குருவினுல் பிரயாணம் தடைபடுதல் உடல் நலம் கெடல், புதனுல் மனைவியோடும், தன் மக்களோடும் கருத்து வேறுபாடு கொள்ளுதல் ஆனுல் இறுதி 15 நாட்களின் போது வெற்றியும் பதவி நிலை உயர்தலும், சூரியனுல் உடல் நலம் கெடுதல், எதிரிகளால் இடர்களுக்குள்ளாதல், ராகுவும் சுக்ரனும் நன்மை செய்வதால் பணவரவு, மக்கட்பேறு அல்லது தன் பிள்ளைகளுக்கும் பெண்களுக்கும் நன்மை, நல்ல நட்புறவுகள், பெரியோர்களால் புகழப் படல், விருந்தினர் வருகை.



**தனுசு :**

[மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய].

செவ்வாய், சனி, ராகு ஆகியவைகளால் கண் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோய்களினுல் அவதியுறல், மனைவியாலும், வெளியாராலும் ஏற்படும் மனவேறுபாடுகளினுல் மனயமைதி கெடல், தீய நடவடிக்கைகளுக்குள்ளாதல், உடல் நலம் கெடல், குருவினுலும் சுக்ரனுலும் புது நம்பிக்கையும் புதிய நண்பர்களும் ஏற்படல், சூரியனுலும் புதனுலும் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது லாபம் பண வரவு, பதவி உயர்வு, கடைசி 15 நாட்களின்போது உடல் நலமின்மை, குடும்பத்துடன் கருத்து வேறுபாடுகள்.



**மகரம் :**

[உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய].

செவ்வாய், சனி, ராகு ஆகியவைகள் தீங்குவிளைவிப்பதால் தீயநடவடிக்கைகளுக்குள்ளாதால், கண் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோய்களினுல் அவதியுறல், குடும்பத்தில்உட்பூசல்கள் ஏற்படல், குருவினுல் கவலைகள் ஏற்படல், சூரியனுலும், புதனுலும் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது நஷ்டம், அலுவலகக்கவலைகள் ஏற்பட்டாலும் நல்ல நண்பர்களின் உதவியால் அவை தணிக்கப்படல் ஆனுல் சுக்ரனுல் லாபம், புதியன வாங்குதல், தன்னிலை உயர்தல்.



**கும்பம் :**

[அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதையம், பூரட்டாதி, 3-ம் பாதம் முடிய]

சனியும் ராகுவும் தீங்கிழைப்பதால் கவலைகள், பிராயாணங்கள் ஏற்படல், செவ்வாயினுலும்குருவினுலும் வெற்றி, லாபம், அரும் பொருட்கள், வீடு, ஆடை ஆபரணங்கள்கிடைக்கப்பெறல் சுக்ரனுல் மக்கட் பேறு, பணவரவு, தானியவகைகள் கிடைக்கப் பெறல், கேளிக்கைகளில் ஈடுபடுதல், சூரியனுலும் புதனுலும் இகழ்ச்சிக்குள்ளாதல் பொருள் நஷ்டம், கடும் முயற்சிகளை மேற்கொளல்.



**மீனம் :**

[பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய].

சூரியன், புதன், செவ்வாய், ராகு ஆகியவைகளால் கடும் முயற்சிகளை மேற்கொளல், கவலைகள், கருத்து வேறுபாடுகள், உடல் நலம் கெடல், தம் மக்கள் சம்பந்தப்பட்ட கவலைகள், சுக்ரனுல் மகிழ்ச்சி, மனயமைதிபெறல் சனியினுல் உடல்நலமேன்மை வெற்றி, குருவினுல் உறவினருடன் கருத்து வேறுபாடுகள், கவலைகள்.

(பின் குறிப்பு: தீமை செய்யும் கிரகங்களுக்கு சாந்தி செய்தல் நலம்.)

## சந்தாதாரர்களுக்கு...

30-4-78 ஆம் தேதியுடன் சந்தாக் காலம் முடிவடையும் சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. ஆகவே அவ்வெண்கள் உடைய சந்தாதாரர்கள் தங்கள் சந்தா எண்களைக் குறித்துக் கொண்டு தாங்கள் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்தி தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளவும். T

*139, 149, 154, 171, 187, 192, 196, 200, 214, 284, 292, 316, 380, 382, 367, 466, 487, 604, 1120 1126, 1131, 1150, 1158, 1164, 1169, 1175, 1176, 1214, 1231, 1232, 1343, 1803, 1820, 1821, 1822, 1823, 1824, 1825, 1826, 1827, 1828, 1829, 1831, 1832, 1834, 1837, 1842, 1843, 1844, 1845, 1846, 1847, 1848, 1849, 1850, 1851, 1852, 1853, 1854, 1855, 1856, 1857, 1858, 1859, 1860, 1861, 1862, 1863, 1864, 1865, 1866.*

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T.T.D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI. 517501




திருமலை திருப்பதி தேவஸ்தான

## ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

ஹாரத்தி (ஒவ்வொன்றுக்கும்)கட்டணம் ரூ. 1

### ஸேவைகள் (ஸேவிப்பது மாத்திரம்)

| | | |
|---|---|---|
| சிறப்பு தரிசனம் | ரூ. | 25 |
| தோமாலை ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |
| அர்ச்சனை (ஸஹஸ்ரநாமம் அஷ்டோத்தரம்)பிறகு தரிசனம் | ,, | 4 |
| ஏகாந்த ஸேவைக்குப் பிறகு தரிசனம் | ,, | 4 |
| பூலங்கி ஸேவைக்குப் பிறகு தரிசனம் | ,, | 4 |
| திருமஞ்சனம் ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |

### கைங்கர்யங்கள் (செய்து வைப்பது)

| | | |
|---|---|---|
| ஆமந்த்ரணோத்ஸவம் | ,, | 200 |
| பூலங்கி ஸேவை | ,, | 60 |
| திருமஞ்சனம் | ,, | 450 |
| கம்பூராக் கிணணி | ,, | 250 |
| புனுகுசட்டம் கிண்ணி | ,, | 100 |
| கஸ்தூரிக் கிண்ணி | ,, | 100 |
| ஜாபாராக் கிண்ணி | ,, | 100 |
| ஸஹஸ்ர கலசாபிஷேகம் | ,, | 2000 |
| திருப்பாவாடை | ,, | 4000 |
| கோயிலாழ்வார் திருமஞ்சனம் | ,, | 1745 |

### உத்ஸவக் கட்டணங்கள்

| | | |
|---|---|---|
| வஸந்தோத்ஸவம் | ,, | 2000 |
| பிரம்மோத்ஸவம் | ,, | 750 |
| கல்யாண உத்ஸவம் | ,, | 1000 |
| ஊஞ்சல் சேவை | ,, | 1000 |
| தெப்போற்சவம் | ,, | 1500 |

### வாஹனங்கள்

| | | |
|---|---|---|
| ஸர்வபூபாலம் வஜ்ரகவச சேவை 72+1 (ஹாரத்தி) | ,, | 73 |
| ஸர்வபூபாலம், கல்பவ்ருக்ஷம், பெரிய சேஷவாஹனம் ஸூர்யப்ரபை, புஷ்பரதம், முத்துப்பந்தல், தங்ககருடவாஹனம் தனித்தனி 62+1 (ஹாரத்தி) | ரூ. | 63 |
| வெள்ளி கருடவாஹனம், ஹனுமந்த வாஹனம், சின்ன சேஷவாஹனம், குதிரை வாஹனம், ஸிம்ஹவாஹனம், ஹம்ஸ வாஹனம், சந்திரபிரபை, யானை வாஹனம் தனித்தனி 32+1 (ஹாரத்தி) | ,, | 33 |

### பிரஸாதங்கள் (கால் சோலா தளிகை ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| தத்யோதனம் | ,, | 40 |
| புளிஹோரை | ,, | 50 |
| பொங்கல் | ,, | 55 |
| சர்க்கரைப் பொங்கல் | ,, | 65 |
| ஸாகர்பாத் | ,, | 80 |
| கேஸரிபாத் | ,, | 90 |
| பாயஸம் | ,, | 85 |
| சீரா | ,, | 155 |

### படிகள் (படி ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| லட்டு | ,, | 450 |
| வடை | ,, | 250 |
| போளி | ,, | 225 |
| தோசை | ,, | 100 |
| ஸுகியம் | ,, | 200 |
| ஜிலேபி | ,, | 450 |
| அப்பம் | ,, | 230 |
| தேன்குழல் | ,, | 200 |

### நித்திய ஸேவைகள்

| | | |
|---|---|---|
| நித்திய கற்பூர ஹாரத்தி | ,, | 21 |
| நித்திய நவநீத ஹாரத்தி | ,, | 42 |
| நித்திய அர்ச்சனை | ,, | 42 |

குறிப்பு: ஸஹஸ்ர கலசாபிஷேகம் ஒவ்வொரு புதன்கிழமையும், திருப்பாவாடை ஒவ்வொரு வியாழக்கிழமையும் நடைபெறும்.
மற்றைய விவரங்களுக்கு கீழே கொடுக்கப்பட்டுள்ள முகவரியுடன் தொடர்புகொள்ளுக.

செயலாட்சித் தலைவர்,
திருமலை திருப்பதி தேவஸ்தானம்,
திருப்பதி 517501.

நாகலாபுரத்திற்கு . . . . . . வருகை புரியுங்கள் !



## ஸ்ரீ வேதவல்லி சமேத
## வேதநாராயண சுவாமி கோயில் பிரம்மோற்சவம்

உற்சவ விவரங்கள்

| தேதி | கிழமை | பகல் உற்சவங்கள் | இரவு உற்சவங்கள் |
|---|---|---|---|
| 21-4-78 | சனி | —— | சேனாதிபதி உற்சவம் அங்குரார்ப்பணம் |
| 22-4-78 | ஞாயிறு | திருச்சிஉற்சவம் துவஜாரோஹணம் | பெரிய சேஷ வாஹனம் |
| 23-4-78 | திங்கள் | சிறிய சேஷ வாஹனம் | ஹம்ஸ வாஹனம் |
| 24-4-78 | செவ்வாய் | ஸிம்ஹ வாஹனம் | முத்துப்பந்தல் வாஹனம் |
| 25-4-78 | புதன் | கல்பவிருக்ஷ வாஹனம் | சர்வபூபால வாஹனம் |
| 26-4-78 | வியாழன் | பல்லக்கில் மோகினி அவதாரம் | கருட வாஹனம் |
| 27-4-78 | வெள்ளி | ஹனுமந்த வாஹனம் (மாலை-வசந்தோற்சவம்) | கஜ வாஹனம் |
| 28-4-78 | சனி | ஸூர்யப்பிரபை வாஹனம் | சந்திரப்பிரபை வாஹனம் |
| 29-4-78 | ஞாயிறு | ரதோற்சவம் | குதிரை வாஹனம் |
| 30-4-78 | திங்கள் | பல்லக்கு உற்வசம், அவப்பிர. தோற்சவம் சக்ரஸ்நானம் | திருச்சி, துவஜாவரோஹணம் |

(தி. தி. தேவஸ்தானத்தைச் சார்ந்த இக்கோயில், சென்னை – திருப்பதி மார்கத்தில், திருப்பதியிலிருந்து 68 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.)